அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

## श्रीजगद्गुरुग्रन्थमाला

ஸ்ரீஜக³த்³கு³ருக்³ரந்த²மாலா

# ॥ आत्मबोधः ॥

# ॥ ஆத்மபோ³த⁴:ம் ॥

ஸ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥



ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஜகத்குரு
**ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த ஸ்வாமிகள்**



शृङ्गगिरि श्रीशारदापीठाधिपतीनां जगद्गुरूणां
**श्रीमदभिनव विद्यातीर्थमहास्वामिनां आशिषः ॥**

**भोः आस्तिकमहाशयाः !**

**परमपुरुषार्थावाप्तये मानवं जन्म लब्धमस्माभिः । परम पुरुषार्थावाप्तिश्च आत्मज्ञानैकसमधिगम्या | आत्मज्ञानं च उपनिषच्छ्रवणसाध्यम् । औपनिषदं श्रवणं वैयासिकसूत्रपरिशीलनेनैव संपादनीयम् । तदिदं सर्वं विधातुमपारयतां लोकानामुपकाराय श्रीमच्छंकरभगवत्पादाः औपनिषदं रहस्यं सरलेषु प्रकरणग्रन्थेषु संजगृहुः । तेषु प्रकरणग्रन्थेषु आत्मबोधनामकः प्रबन्धः सरसं सरलं च आत्मानमवबोधयन् उल्लसति । श्रीशंकर सेवासमितिः ग्रन्थमिमं द्राविडभाषानुवादेन साकं मुद्राप्य प्रकाश्य लोकानां महतीं उपकृतिमातनोत् । सानुवादं ग्रन्थमिमं पठित्वा अध्यात्मपथे 'कृतप्रवेशा भूयासुलका इत्याशास्महे ॥**

**मुकाम् : - चेन्नपुरी ।**

**इति नारायणस्मरणम् ।**

**ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடாதிபதி ஜகத்குரு**

## ஸ்ரீ அபிநவவித்யாதீர்த்த மஹாஸ்வாமிகளின்

**ஆசிமொழி**

மோக்ஷமென்னும் உயரிய புருஷார்த்தத்தைப் பெறவே மானிடப்பிறவி நமக்குக் கிடைத்திருக்கிறது. ஆத்ம ஞானத்தை ஸம்பாதித்தால்தான் மோக்ஷத்தைய டைய முடியும். வியாஸபகவான் அருளிய ப்ரஹ்ம ஸூத்திரங்களை நன்கு பரிசீலி த்து உபநிஷத்துக்களின் கருத்துக்களை குரு முகமாகத் தெரிந்து மனனம் செய்தால் தான் ஆத்மஞானம் ஏற்படும். இவை யாவற்றையும் நடத்துவதற்குத் தகுதி யில்லா தவர்களும் க்ஷேமமடைவதற்காக ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்யார் அநேக சிறிய பிரகரணகிரந்தங்களை இயற்றி அவைகளில் உபநிஷத்துக்களில் காணப்படும் ரஹஸ் யங்களை மிகத்தெளிவாகச் சுருக்கிக் கூறியுள்ளார்கள். அத்தகைய பிரகரண நூல்க ளில் ஆத்மபோதமும் ஒன்று. இது ஆத்மஸ்வரூபத்தை ஸரஸமாகவும் மிகத்தெளி வாகவும் நன்கு விளக்கிக்காட்டுகிறது. இந்த ஆத்மபோதம் என்ற கிரந்தத்தைத் தமிழ் விரிவுரையுடன் கூட **ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதி**யானது அச்சிட்டு வெளியிட்டு ஜனங்களுக்குச் சிறந்த உபகாரத்தைச் செய்துள்ளது. தமிழ் விரிவுரையுடன் கூடிய இந்நூலை எல்லோரும் படித்து ஆத்மவிசார வழியில் புகுந்து பரம சிரேயஸ்ஸை யடையுமாறு ஆசீர்வதிக்கிறோம்,

முகாம்: - சென்னை

**நாராயணஸ்மரணம்**

# பதிப்புரை

ஸ்ரீமத் ஆதிசங்கர பகவத்பாதாசார்யாளின் கிரந்தங்களைத் தமிழ் உரையுடன் யாவருக்கும் உபயோகப்படும்படி எளிய விலையில் பிரசுரிப்பது அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் நோக்கங்களில் ஒன்று. முக்யாதிகாரிகளுக்கு உபநிஷத் பாஷ்யம், கீதாபாஷ்யம், ஸூத்ரபாஷ்யம் ஆகியவைகளை இயற்றிய பின் ஸ்ரீ ஸத்குரு பரம கருணையுடன் அந்தப் பெரிய கிரந்தங்களைப் படித்துத் தெரிந்துகொள்ள சக்தியில்லாத ஸாமான்யர்களையும் காப்பாற்றிக் கைதூக்கிவிட எண்ணி முன் சொன்ன கிரந்தங்களில் கண்ட தத்வங்களையே நன்கு விளக்கிக் காட்டும்படியான ரீதியில் இயற்றியருளியுள்ள பல பிரகரணங்களில் ஆத்மபோதமும் ஒன்று. இது பல திருஷ்டாந்தங்களைக்கொண்டு ஆத்ம ஸ்வரூபத்தை நமக்கு மிகத் தெளிய வைக்கிறது.

ஸ்ரீ பகவத்பாதர் தம்முடைய இந்த கிரந்தத்திற்கு முதல் சுலோகத்திலேயே '**ஆத்மபோதம்**' என்ற நாமகரணத்தைச் செய்து, இதற்கு யார் அதிகாரி; இதன் பிரயோஜனம் என்ன என்பதையும் முதலிலேயே காட்டிவிட்டார்கள். 67 - வது சுலோகத்திலும் ஆத்மபோதம் என்ற பெயரை சூசனையாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

68 சுலோகங்கள் கொண்ட இந்த கிரந்தத்தில் 67 சுலோகங்கள் அனுஷ்டுப் விருத்தத்தில் அமைக்கப்பட்டவை. சீக்கிரம் மனப்பாடம் செய்யக்கூடியவை. உத்தமமான ஆத்ம ஞானத்தைப் படிப்படியாகச் சொல்லி உபதேசித்திருக்கும் ரீதியைச் சிறிது விளக்குவோம்.

**சுலோகம்.**

**1-11** ஆத்மா ஒன்று. ஸர்வவியாபி, உபாதானகாரணம், தடஸ்தலக்ஷணம், ஸ்வரூபலக்ஷணம், பிரபஞ்சம் பொய், பேதம் ஒளபாதிகம்.

**12-14** ஸ்தூல- ஸூக்ஷ்ம - காரண உபாதிகள்.

**15-18** பஞ்சகோசவிவேகம்.

**19-27** அத்யாஸமும், ஆத்மாவின் ஸ்வரூபமும்.

**28-29** ஆத்மா ஸ்வயம்பிரகாச வஸ்து.

**30** ஆத்மாவை அறியவேண்டிய முறைகள்: - சிரவணம்.

**31-33** மனனம்.

**34-37** நிதித்யாஸனமும் அதன் பயனும்.

ஸம்ஸ்கிருத பாஷையைக் கற்றுத் தெரிந்துகொள்ள முடியாதவர்களுக்கும் இந்த கிரந்தம் உபயோகப்படும் வழியில் பிரசுரிக்கப்படவேண்டும் என்ற சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சாரதாபீடாதிபதிகளின் ஆஜ்ஞையை சிரமேல் தாங்கி எங்கள் ஸமிதியால் இது பிரசுரிக்கப்படுகிறது. ஸ்ரீ ஜகத்குருவை தியானம் செய்து கொண்டு இதை எல்லோரும் படித்து ஆத்மஞானத்தைப் பெறவேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

**K.V. சுப்பரத்னம்**,
கார்யதர்சி,
அகிலபாரத சங்ஸேவாஸமிதி.

உ

# முன்னுரை

## "एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

- விவேகசூடாமணி

இது நம் "**ஸ்ரீ சங்கர க்ருபா**" பத்திரிகையின் தலைப்பில் காணும் நற்செய்தி. ஸ்ரீசங்கரரின் கிருபையை அடைவதற்கு முக்கிய வழி, அவர்கள் எழுதிய நூல்களைப் படித்து அனுபவத்துக்குக் கொண்டுவர முயல்வதே ஆகும்.

ஸ்ரீ சங்கரரின் வேதாந்தப் பிரகரணங்களுள் ஒன்றாகிய **ஆத்மபோதம்** தமிழ் விரிவுரையுடன் ஸ்ரீ சங்கர கிருபாவில் வந்துகொண்டிருந்தது. இப்போது இது தனிப் புத்தகமாக வெளிவருகிறது.

ஆத்மபோதத்திலுள்ள உயர்ந்த கருத்துக்களை எளிய நடையில் விளக்கியிருக்கும் உதவி ஆசிரியர் வியாகரண சிரோமணி வேதாந்த வித்வான் **ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகளுக்கு** நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். இத்தமிழ் உரையின் சில பாகங்கள் **ஸ்ரீ மதுஸூதன ஸரஸ்வதியின்** வடமொழி உரையைத் தழுவியிருக்கிறது. **அத்வைதஸித்தி**, **வேதாந்த கல்பலதிகை கூடார்த்த தீபிகை** முதலிய நூல்களின் ஆசிரியரான பிரபல கீர்த்தியையுடைய ஸ்ரீ மதுஸூதன ஸூரஸ்வதிகளுக்கு வேறுபட்டவர், **ஆத்மபோத** உரையாசிரியரான ஸ்ரீ மதுஸூதன ஸரஸ்வதியவர்கள். இவர் ஸ்ரீதர ஸரஸ்வதிகளின் சீடராவர்.

மற்றப் பிரகரண கிரந்தங்களையும் உரையுடன் பிரசுரிப்பதற்கு வேண்டிய ஆற்றலையும் அறிவையும் இந்தத் தமிழ் உரையாசிரியருக்கு அருளுமாறு ஸ்ரீ சங்கரரின் மலரடிகளை வணங்குவோம்.

**ஆசிரியர்**
**"ஸ்ரீ சங்கர க்ருபா"**

# ॥ आत्मबोधभूमिका ॥

**(श्रीभाष्य स्वामी)**

मानुष्यं समवाप्य भारततले तत्रापि भूदेवतां
तत्राद्वैतिकुलेऽपि जन्म भजतां किं ब्रूमहे धन्यताम् ।
इत्थं सत्यपि सूत्रवार्तिकमहाभाष्याणि वा शांकरीः
सूक्तीर्वा यदि न स्मरन्त्यनुदिनं धिग्जन्म ततादृशाम् ॥

अयि भारतदेशवास्तव्याः! सुरभारतीसमुपासकाः! कर्णे कुरुत किमपीदं प्राप्तावसरं वाक्यजातम् । कोहि नामेदं न जानीते भारतीयो नाम; यदिह वैरिचे प्रपञ्चे आविरिञ्चात् आ च पिपीलिकातः; सुखप्रेप्सा- दुःखपरिजिहीर्षाभ्यामेव सर्वोऽयं लोकः सर्वात्मना समुद्यच्छमानोऽपि स्वीयं समीहितमलभमानः अविद्यासंतमसस माच्छन्नदृष्टितया समुचितं पन्थानमनधिगत्य, तत्तत्समयसमुदित्वरसंतापसंत तिदन्तु रतरे भयंकरे संसृतिकान्तारे निरन्तरं बंभ्रमीतीति । तमिमं निर्गतिकं दुर्गततरं प्राणिवर्ग अपवर्गमार्गे प्रवर्तयितुकामा हि भगवती श्रुतिः "उत्तिष्ठत जागृत प्राप्य वरान् निबो धत" (कठोपनिषत् ३ – १४) इति सानुक्रोशं क्रोशमाना सर्वानस्मान् समुद्बोधयति ॥

तदर्थं च भगवान् भाष्यकारः इत्थं संजग्राह - "अनाद्य- विद्याप्रसुप्ताः हे जन्तवः! उत्तिष्ठत — आत्मज्ञानाभिमुखाः भवत । जाग्रत- अज्ञाननिद्राया घोररूपायाः क्षयं कुरुत । कथम्? वरान् आचार्यान् प्राप्य आत्मानं अहमस्मीत्यवगच्छत " इति ॥

अत्र हि उपदेशत्रयं क्रोडीकृतमस्ति - उत्थानं, जागरणम्, आत्मप्रबोधनं चेति । तथाच श्रवणाद्यभ्यासेन आत्मज्ञानाभिमुख्यं संपाद्य, ताहगात्मविद्योपदेष्टारमाचार्यं विधिवदुपसद्य, तदुपदिष्टमहा-वाक्यार्थपरिचिन्तनेन अनाद्यविद्यारूपाया निद्रायाः क्षयं कारयित्वा कृतार्था भवत इति सदयमुपदिशत्येषा श्रुतिः । यद्यपि आनन्दावाप्तिरेष परमं प्रयोजनं, तथापि अविद्यानिवृत्ति विना तदसंभवात् सैवेह प्रयोजनमित्यभिधीयते ॥

वस्तुतस्तु अविद्याया अपि आत्मनि कल्पितत्वात् तन्निवृत्तौ स्वरूपभूतानन्दः स्वयमेवाभिव्यज्यते । निवृत्तेश्च प्रध्वंसाभावरूपतया, अभावस्य च अधिकरणात्मकत्वस्वीकारात्, आनन्दात्मनि कल्पिताविद्या- निवृत्तेरपि

आनन्दस्वरूप एव पर्यवसानात्, अविद्यानिवृत्तिरूपस्य वा आनंन्दावाप्तिरूपस्य वा मोक्षस्य वस्तुतो भेदाभावात्, उभयविध- प्रयोजनमपि प्रकृतवाक्येन क्रोडीकृतमित्यङ्गीकारे न कापि क्षतिः ॥

एतादृशमोक्षात्मक प्रयोजनस्य च आचार्योपदेशजन्यमात्मतत्त्व- ज्ञानमेव साधनं इत्यपि प्रकृतवाक्ये " प्राप्य वरान् निबोधत " इत्यनेन समसूचि । यतः "आचार्यवान् पुरुषो वेद" (छान्दो. ६-१४-२) " आचार्याद्धैव विद्या विदिता साधिष्ठं प्रापत् " (छा. ४ - ९ -३) इत्यादि- श्रुतिवचनैः आचार्योपदेशपूर्वकात्मज्ञानस्यैव अविद्यानिवर्तनक्षमसामर्थ्या- तिशयो व्यावर्ण्यते । आचार्योपदेशपूर्वकश्रवणमन नादिवेदान्तविचारा- देवात्मतत्त्वज्ञानं भवतीति सिद्धान्तात् ॥

आत्मतत्त्वविचारे च मनुष्याणामेव मुख्याधिकारः'मनुष्याधि- कारिकत्वा च्छास्त्रस्य' इति न्यायात् । यद्यपि स्वयंप्रतिभातवेदत्वात् देवा अप्यधिक्रियन्ते,'तद्यो यो देवानां प्रत्यबुध्यत स एव तदभवत् तथर्षीणां तथा मनुष्याणाम्'(१-४-१०) इति बृहदारण्यकश्रुत्या देवादीनां सर्वेषां अविशेषेणैव विद्यायां अधिकारबोधनात्, तथापि सम्यक् विचार्यमाणे मनुष्याणामेव अधिकारः प्राधान्येन प्रतीयते, अर्थित्वसा मर्थ्याद्यधिकार प्रयोजकसाम्येऽपि विवेकवैराग्यादिरूपब्रह्मविद्यासाधनानां मानवेष्वेव भूयसा समुपलंभात् ॥

देवास्तावत् मनुष्यापेक्षया अधिकज्ञानशक्तिसंपन्ना एव, तेषां स्वयंप्रतिभात वेदत्वेन वेदार्थविचारस्य अयत्नसिद्धत्वात् । मर्त्यधर्मणां तु गुरुमुखेनैव कर्तव्यवे दाध्ययनादिनियमानामनिवार्यतया, विलंबेनैव वेदार्थ- विचारसंभवात् । तथापि वैराग्यादिसाधनसंपत्तेर्मानवेष्वेव संभवात् तादृशसाधन पौष्कल्यं देवतानां न संभवति । विशिष्टभोगसामग्री- संपन्नानां आशापाशपरवशितचेतसां अप्रतिहतशक्तीनां अकुतोभयसंचाराणां अमृतान्धसां नूतननूतनविषयसुखानुभवमात्रेणैव सर्वात्मना कालो व्यति- क्रामति । भोगैकस्पृहयालुनां तेषां विवेकस्य का वा प्रसक्तिः? सदा वैषयिक सुखसुधाह्रदावगाढानां वैराग्यं वा कथं संभवति? सांसारिक-दुः खलेशमजानन्तस्ते कथमिव विषयेभ्यो विरज्येरन्? । तदभावे तु तीव्रमुमुक्षा तेषां दूरापेतैव । तथाच सति कुतस्तेषां आत्मतत्त्वविचारे प्रवृत्तिः? कुतस्तरां गुरूपसदनम्? कुतस्तमां च आत्मतत्त्वज्ञानद्वारा तेषां मोक्षसाम्राज्यपदवी वा संघटेत? अत एवोक्तं भागवते देवता अपि मनुष्यजन्मलाभाय स्पृहयन्ते इति ॥

अहो अमीषां यदकारि शोभनं प्रसन्न एषां यदुत स्वयं हरिः ।
यैर्जन्म लब्धं नृषु भारताजिरे मुकुन्द सेवौपयिकं स्पृहा हि नः ॥

अनेन च पद्येन मानुष्यप्राप्तेर्महिमा व्यंजितः । तथा च उपक्रमे निर्दिष्टपद्यानुसारेण भारतदेशे मनुष्यजन्मलाभस्य यत्प्राशस्त्यमुक्तं तदेव भागवतपद्येनापि स्फुट| कृतम् । देवतानामपि स्पृहणीयत्वं तु अधिको विशेषः प्रदर्शितः । युक्तं चैतत् । यतः काठके श्रूयते - "यथादर्शे तथात्मनि यथा स्वप्ने तथा पितृलोके । गन्धर्वलोके छायातप्रयोरिष ब्रह्मलोके ॥ यथा अप्सु परीव ददृशे तथा (६-५) इति । इदमख भाष्यम् -'यस्मात् इहैव आत्मनो दर्शनं आदर्शस्थस्येव मुखस्य स्पष्टमुपपद्यते, न लोकान्तरेषु ब्रह्मलोकादन्यत्र । स च दुष्प्रापः विशिष्ट- कर्मज्ञानसाध्यत्वात्'इति ॥

अन्य माद्रायः यद्यपि देवपि गन्धर्वलोकादिषु विद्यमानानां मनुष्यापेक्षया ज्ञानशक्तिरभ्यधिका स्यात्, तथापि प्रागुक्तरीत्या तेषां विवेकवैराग्यादिसाधनानां दुःसंपादतया विद्यमानापि सा ज्ञानशक्तिः अप्रयोजकतया न कार्यक्षमा भवति । तत्र हि विविधभोगानुभव- व्यप्रचेतसां आत्मतत्त्वविचाराभिमुखी चित्तवृत्तिर्न कदापि संभवति विषयाणां स्वाभिमुखचित्तवृत्त्युत्पादनस्वखाभाव्यात् । सर्वविधभोगानु- भवात्परं वैराग्यं संभविष्यतीत्येतदपि केवलमाशामोदकखादनमात्रमेव,

न जातु कामः कामानामुपभोगेन शाम्यति ।
हविषा कृष्णवर्त्मेव भूय एवाभिवर्धते ॥

इति न्यायात् । ब्रह्मलोके तु सनकादीनां ब्रह्मविदां संगेन विवेकादि- संभवात् सदा वेदान्तविचारेण आत्मानात्मविवेचनं, छायातपवत् विविक्तात्मस्वरूपनिर्धारणं च सुकरमेव स्यात् । परं तु ब्रह्मलोक एव दुर्लभः विशिष्टकर्मोपासनसमुच्चयैकसमधिगम्यत्वात् । पारिशेष्यात् मनुष्यशरीरा- बच्छेदेन आत्मतत्त्वविचारद्वारा कैवल्यप्राप्तिस्तु सुलभैव । मनुष्यशरीरस्य हि पुण्यपापो भयारब्धतया सुखेन साकं दुःखानुभवस्याप्यवर्जनीयतया तत्र वैराग्यसंभवात् ॥

स्वदुःखं परेषामपि बहुविधं दुःखजातं दृष्ट्वा इतः परं एतादृश- दुःखलेशोऽपि यथा न स्यात्तथा आत्यन्तिकी दुःखनिवृत्तिरेव संपादनीया । तत्र को वा समुचितोपायः इति तदन्वेषणे मनुजाः प्रयतन्ते । प्रयतमानाश्च तादृशदुःखानां मूलं किं इति विचारयन्ति । विचारयन्तश्च शरीरपरिग्रह एव मूलमित्यध्यवस्यन्ति । यतः'न ह वै

सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहतिरस्ति'' अशरीरं वाव सन्तं न प्रियाप्रिये स्पृशतः (छा. ८-१२) इति च श्रुतिभ्यां अन्वयव्यतिरेकमुखेन सशरीरत्वस्यैष दुःखमूलत्वाध्यवसायात् । ततश्च तन्निवृत्त्युपायमव जिगमिषन्ति । शरीर- परिग्रहस्य च प्राक्तनकर्माण्येव कारणं, कर्मणां च कामः कामस्य व शरीराद्यात्माभिमानः, तस्य च अनाद्यविद्या मूलकारणमिति शास्त्रतो- ऽवगच्छन्ति । तथाच पारमर्ष सूत्रम् - 'दुःखजन्मप्रवृत्तिदोष मिथ्या-ज्ञानानां उत्तरोत्तरापाये तदनन्तरापायादपवर्गः' इति ॥

सर्वदुःखनिदानभूता मूलाविद्या तु आत्मतत्वज्ञानेनैव निवर्तनीया'तरति शोकमात्मवित्'(छा. ७- १) इत्यादिश्रुत्यनुसारात् । तथाच सर्वदुः खनिवृत्तिसा धनात्मज्ञानसंपादनाय प्रयतमानं पुरुषधौरेयमुपलभ- मानो हि भगवान् बादरायणः 'अथातो ब्रह्मजिज्ञासा' इत्यारभ्य 'अनावृत्तिः शब्दात्'इत्यन्तां चतुर्लक्षणीं ब्रह्ममीमांसां प्रणिनाय । तदर्थनिर्णयाय च भगवत्पादीयं भाष्यं प्रावर्तिष्ट । भाष्यार्थनिर्णयाय च  भामत्यादिपञ्चप्रस्थानी, तथा टीकाविवरणादिपञ्च प्रस्थानी च आत्मान- मलभत । तथैवोपनिषदां भगवद्गीतायाश्च भाष्यव्याख्यारूपा अनल्पा ग्रन्थकलापाः उपकल्पिताः । एते च निबन्धाः उत्तमाधिकारिणां शास्त्र- ज्ञानामेत्र सुगमाः सन्तीति पर्यालोच्य मध्यमाधिकारिणामनुग्रहाय शतश्लोकी- विवेकचूडामण्यादयः सरलतराः प्रकरणग्रन्था उपनिबद्धाः करुणया श्रीमदाचार्य पादैः ॥

तत्राप्यशक्तानां मन्दाधिकारिणां तु आत्मानुसंधानपद्यरूपाः स्तो a पाठरूपाश्च बहवो लघुप्रन्थाः सरलया सरण्या समाकलिताः । किं बहुना? यः कश्चिदलसशिखामणिरस्ति चेत् तस्यापि समुद्दिधीर्षया 'भज गोविन्दं' इत्यादिगानोपयुक्तपद्यमालाश्च समुपदिष्टाः । अहो ! महनीयतमानां तेषां महिमा वा करुणा वा नहि क्वचित् कदाचिदपि परिच्छेद्यकोटिमाटीकेत ॥

सर्वथा धन्या वयमद्वैतिनः; यतः पवित्रतमे भारतभूपरिसरेऽस्मिन् लब्धजन्मानः । तत्रापि भूसुरताप्रापकभाग्ययोगात्, ततोऽपि अद्वैतिनां कुले जन्मलाभाच्च कृतकृत्याः स्मः । 'अहो अमीषां यदकारि शोभनं' इति भागवतश्लोकोक्तदिशा देवतानामपि वयं स्पृहणीयजन्मानः संवृत्ताः । एतादृशजन्मसाफल्यस्य कारणभूताच भगवत्पादा एवेति न कदापि विस्मरेम । तैरेव हि भगवत्पादैः मध्यमाधिकारिणां सौलभ्याय प्रणीतेषु प्रकरणग्रन्थेषु सर्वोत्तमः आत्मबोधाख्यो ग्रन्थः सुलभतया आत्मतत्व- मवबोधयन् अन्वर्थसंज्ञामेव बिभर्ति ॥

यद्यपि विवेकचूडामण्यादयो ग्रन्थाः अद्वैतवेदान्तप्रक्रियाणां प्रधान भूतानां सामस्त्येनैव निरूपणपराः समुल्लसन्ति तथापि ततोऽपि लघुतरोऽयं आत्मबोधः बह्वर्थगर्भितत्वेन लाघवेन च मुमुक्षुलोकस्य सुतरामुपकरोति । अल्पाकारोऽप्ययं ग्रन्थः कियन्तमहो शास्त्रार्थसारमाविष्करोति, कति वा दृष्टान्तानुपदर्शयति, कीदृशीच उपदेशषैखरीः विशदीकरोति, कतिधा च आत्मतत्त्वं करतलामलकवदादर्शयति?

सर्वथा सर्वजनैः स्पृहणीयोऽयं ग्रन्थतल्लजः संप्रति शंकरसेवा- समिति संचालकैः शंकर कृपाद्वारा प्रकटीकृतः सानुवादमित्यवगत्य को वा भारतीय :, तत्रापि द्राविडभाषाभिज्ञः कोवा तद्दर्शनेन नात्मानं धन्यं मन्येत । द्राविड भाषानुवादश्चायं परमरमणीयः समावर्जयतितमां रसिकजनचेतांसि । श्रीमतां पद्मपादाचार्याणां टीकामनुसृत्यैव तत्र तत्र अवतारिकाः विमर्शनानि तात्पर्यार्थवर्णनानि च समावेशितानि । तेन च विशेषतः स्पृहणीयतमः संवृत्तोऽयं ग्रन्थतल्लजः सहृदयानाम् ॥

घरमप्रामाणिकश्रीपद्मपादाचार्यटीकानुगतैः अर्थकुसुमैः आत्मतत्त्व- सुग न्धिभिरनुविद्धेयं भगवत्पादीयसूक्तिमालिका आत्मबोधाख्या सदा कण्ठे धारणीया समस्तैरास्तिकजनैर्भारतीयैः इत्येतावदुक्त्वा विरमामो विस्तरात् इति सबै शिवम् ॥

आत्मबोधाभिधानेयं भगवत्पादगुंभिता ।
आत्मतत्त्वसुगन्धाढ्या धार्यतां मालिका बुधैः ॥
टीका कुसुमोपेतां आत्मबोधाख्यमालिकाम् |
कण्ठे करे वा कुर्वाणाः कलयन्तु कृतार्थताम् ॥
भाष्यस्वामिकृता सेयमात्मबोधार्थबोधिनी ।
भूमिका मुक्तिसौधाप्रमारोढुं भूमिकायताम् ॥

# ஆத்மபோத பூமிகை

“இப்புண்ணிய பாரத பூமியில் மானிடப்பிறவியை யடைந்து, அதிலும் விப்ரனு கவும், அத்வைதிகளின் வம்சத்திலும் பிறவிப்பேறு பெற்றுள்ளவர்கள் மிக்க பாக்யசாலிகள். ஆனுல் இவர்கள் தினந்தோறும் ஸ்ரீ சங்கர பகவத் பாதருடைய பாஷ்யங்களேயோ உபதேசங்களேயோ ஸ்மரிக்காவிடில் இவர்க ளின் பிறவி வீண்தான்.”

இப்பிரபஞ்சத்தில் ப்ரஹ்மா முதல் எறும்பு வரையில் ஒவ்வொரு பிராணியும், ஸுகத்தைப் பெறவும் துக்கம் நீங்கவும் பலவாறுக முயற்சி செய்த போதிலும், அக்ஞானம் என்ற இருள் மூடியிருப்பதால் சரியான உபாயம் தெரியாமல் தான் கோரியது நிறைவேறுததுடன் பலவிதத் துன்பங்கள் நிறைந்த ஸம்ஸாரச்சுழலில் சுற்றிச்சுற்றி வருகின்றனர் என்பது யாவரும் அறிந்ததே. வேறு கதியில்லாமல் திண்டாடுகிற பிராணிகளேக் கண்டு கருணேயால் கடோபநிஷத்து பின்வருமாறு உபதேசிக்கிறது: - “எழுந்திருங்கள்! விழித்துக்கொள்ளுங்கள்! ஆசார்யரை ஸேவித்து ஆத்மஞானம் பெறுங்கள்" ஸ்ரீ பகவத்பாதர் தம் பாஷ்யத்தில் இந்த சுருதிக்கு விரிவுரை எழுதியிருக்கிருர்கள்: - "அனுதி காலமாக ஏற்பட்டுள்ள அக்ஞானமென்னும் தூக்கத்தில் ஆழ்ந்துள்ள பிராணிகளே! எழுந்திருங்கள் - ஆத்மஞானம் பெறும் வழியில் செல்லுங்கள். உயரிய ஆசார்யனேயடைந்து அவர் உபதேசமூலம் ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு அறிந்து கொள்ளுங்கள். அக்ஞானமென்னும் பயங்கரமான தூக்கத்தை விட்டொழியுங்கள்”.

இங்கு வேதமாதா நமக்கு மூன்று உபதேசங்கள் செய்திருக்கிருள். (1) எழுந்திருப்பது; அதாவது வேதாந்த விசாரம் மூலம் ஆத்மஞான வழியில் செல்வது (2) ஆசார்யரை முறைப்படி ஸேவித்து மஹாவாக்யோபதேசம் பெறுவது (3) இதை எப்பொழுதும் சிந்திப்பதன் மூலம் ஆத்மஞானமடைந்து அக்ஞானத்தை ஒழித்து கிருதார்த்தனுவது. ஆனந்தம் பெறுவதுதான் முக்ய பிரயோஜனமாயிருந்தாலும், அக்ஞானம் நீங்காமல் ஆனந்தம் ஏற்படாதாதலால், அக்ஞானம் விலகுவதையே இங்கு முக்ய பிரயோஜனமாகக் கூறப்பட்டிருக்கிறது. மேலும் அவித்யை என்பதும் ஆத்மாவில் ஆரோபிதம், ஞானத்தால் ஆனந்த ஸ்வரூபமான ஆத்மாவை மறைத் துக் கொண்டிருக்கும் அக்ஞானம் விலகியதும் ஆனந்தம் தானுகவே பிரகாசிக்கிறது. இதற்கு வேறு முயற்சி தேவையில்லே. அக்ஞானம் நீங்குகிறது என்று சொன்னதா லேயே ஆனந்தமடைகிறுன் என்பதும் தானுகவே கிடைக்கிறது. ஆகவே ஆனந்தா வாப்தியும் இங்கு கூறப்பட்டதாகவே கொள்ளலாம். இவ்வித மோக்ஷத்தையடைய ஆசார்யரை ஸேவித்து அவருடைய உபதேசம் மூலம் ஆத்மஞானத்தை ஸம்பாதிப் பதுதான் முக்ய உபாயம். ஆசார்ய உபதேச மூலம் ஞானமடைந்தால்தான் அக்ஞானம் விலகி ஆனந்தம் ஏற்படும் என்பது இந்த சுருதியிலும் வேறு பல உபநிஷத்துக்களிலும் கூறப்பட்டிருக்கிறது.

ஆத்ம விசாரம் செய்வதற்கு தேவர்களேவிட மனுஷ்யர்களே மிக்க தகுதியுள் ளவர்கள். உண்மையில் மனிதர்களே விட தேவர்கள் உயர்ந்தவர்கள் தான். அவர்களு

க்கு ஞானம் சக்தி முதலியவைகளெல்லாம் மனிதர்களைவிட அதிகம். அவர்களுக்குப் பிறவியிலேயே வேதத்தின் அறிவு ஏற்பட்டு விடுகிறபடியால் மனிதர்களைப்போல குருமுகமாகத் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியமில்லை. இவ்விதப்பெருமைகள் தேவர்களுக்கு இருந்தபோதிலும் ஆத்மவிசாரத்திற்கு முக்ய ஸாதனமான விவேகம், வைராக்கியம் முதலியவை அவர்களுக்கு ஏற்பட வழியில்லாததால், அவர்கள் முக்ய அதிகாரிகளாகமாட்டார்கள். தாங்கள் விரும்பும் போகப் பொருள்களெல்லாம் நினைத்தவுடன் கிடைத்து, அமிருத பானமும் செய்து, மூப்பில்லாமல் எப்பொழுதும் வாலிப பிராயத்திலேயே இருக்கும் சரீரத்துடன் பலவித ஆசைகளால் தூண்டப்பட்டு தங்குதடையின்றி எங்கும் பயமின்றி ஸஞ்சரிக்கும் தேவர்கள் எப்பொழுதும் விஷயஸுகாநுபவத்திலேயே ஈடுபட்டு துக்கத்தையே அறியாதவர்களாதலால், விவேகமும் வைராக்யமும் அவர்களுக்கு ஏற்பட இடமில்லை. வைராக்யமில்லாத தால், மோக்ஷமடைவதில் தீவ்ர விருப்பமோ, குருவைத் தேடிச்செல்வதோ, ஆத்ம விசாரம் செய்வதோ ஆத்மஞான மூலம் மோக்ஷமடைவதோ இவை ஒன்றும் அவர்களுக்கு ஸம்பவிக்காது. ஆகையால்தான் பாகவதத்தில், பாரத பூமியில் பிறவி யேற்பட தேவர்களும் ஆசைப்படுகிறுர்கள் என்று கூறப்பட்டிருக்கிறது.

கடோபநிஷத்திலும் மனிதப் பிறவியின் மேன்மை விவரிக்கப்பட்டிருக்கிறது. "தேவலோக - பித்ருலோக - கந்தர்வலோகங்களில் எல்லோரும் எப்பொழுதும் விஷய ஸுகாநுபவத்திலே ஈடுபட்டிருப்பதால் ஆத்மவிசாரத்தில் புத்தி செல்லாது. நெய் ஆஹுதி செய்வதால் அக்னி வளருவதுபோல விஷயங்களையநுபவிக்க அநுபவிக்க மேலும் மேலும் ஆசை பெருகுமே தவிற் குறையாது. ஆகவே எல்லா வற்றையும் அனுபவித்த பிறகு வைராக்யம் ஏற்படுவதற்கு இடமில்லை. ஆகவே அவர்களுக்கு ஞானம் ஏற்பட வழியில்லை. ப்ரஹ்மலோகத்தில் ப்ரஹ்மவித்துக்களின் ஸங்கத்தால் விவேக் வைராக்யாதிகள் ஏற்பட்டு ஸ்பஷ்டமாக ஆத்மஞானம் ஏற்படலாம். ஆனுல் ப்ரஹ்மலோகம் செல்வது எளிதல்ல. அதற்கு முயற்சி செய்வ தை விட ஸுலபமாக இங்கேயே ஞானமடைந்துவிடலாம். புண்யமும் பாபமும் கலந்து ஏற்பட்ட இம்மானிடப்பிறவியில் பல துக்கங்களை அநுபவிப்பதால் எளிதாக விவேக வைராக்யாதிகள் ஏற்படக்கூடும்.

மனிதனுகப் பிறந்த ஒவ்வொருவரும் துன்பப்படுவதைக் கண்டு வைராக்யம் கொண்டு இனிமேல் துக்கம் ஏற்படாமல் எல்லா துக்கங்களும் அடியோடு விலகுவத ற்கு உபாயத்தைச் சிந்திக்கவேண்டும். துக்காநுபவம் ஏற்பட முக்ய காரணம் இந்த சரீரம்தான். சரீரம் முற்பிறவிகளில் செய்த வினைகளால் ஏற்படுகிறது. இவைகளுக்கு காமமும், அதற்கு சரீரத்தில் ஆத்மாபிமானமும், அதற்கு அனுதியான அக்ஞானமும் காரணமாகிறது. ஆகவே எல்லா துக்கங்களுக்கும் மூலகாரணம் அனுதியான அவித் யைதான். இது ஆத்ம ஸாக்ஷாத்காரத்தால்தான் நீங்கும்.

இந்த ஆத்ம ஞானத்தை ஸம்பாதிப்பதில் முயற்சிக்கும் புருஷனுக்காகத்தான் பாதராயணர் நான்கு அத்யாயங்கள் கொண்ட ப்ரஹ்மமீமாம்ஸை என்னும் ப்ரஹ்ம ஸூத்ரத்தை இயற்றியுள்ளார். இதன். அர்த்தத்தைத் தீர்மானிக்க பகவத் பாதரின் பாஷ்யமும், பாஷ்யத்தின் அர்த்தத்தைப் புரிந்துகொள்ள பாமதி முதலான கிரந்தங்க

ளும், பஞ்ச பாதிகை முதலான நூல்களும் ஏற்பட்டிருக்கின்றன. இது போல உபநிஷத்துக்களுக்கும், கீதைக்கும் ஆசார்ய பாஷ்யமும், பாஷ்ய வியாக்யான ங்களும் இருக்கின்றன. இந்த கிரந்தங்களெல்லாம் சாஸ்திரங்களில் பயிற்சியுள்ள உத்தமாதிகாரிகளுக்குத்தான் பயன்படுமென்பதை ஆலோசித்து, மத்யமாதிகாரிகளின் உபயோகத்திற்காக ஸ்ரீ பகவத் பாதர் அவர்கள் சாஸ்திரார்த்தத்தை ஸுலபமாகப் புரிந்துகொள்ளும் ரீதியில் **சதச்லோகி**, **விவேகசூடாமணி** முதலான பிரகரண கிரந்தங்களை இயற்றியுள்ளார்கள். இதற்கும்ஸாமர்த்தியமில்லாத மந்தாதிகாரிக ளிடம் கருணையால் ஆத்மானுஸந்தான ரூபமாயும், ஸ்தோத்திர ரூபமாயுமுள்ள பல சிறிய நூல்கள் ஸரளமான நடையில் அருளப்பட்டிருக்கின்றன. அதிகம் சொல்வா னேன்? எவனுவது மஹா சோம்பேரியாயிருந்தாலும், அவனையும் கைதூக்கி விடுவதற்காக பஜகோவிந்தம் முதலான பாடுவதற்குத் தகுதியுள்ள ஸ்தோத்திரங்க ளும் இயற்றப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ பகவத்பாதருடைய கருணையையோ, மாஹாத் மியத்தையோ யாரும் அளவிட்டுக்கூறமுடியாது. தேவர்களும் பிறக்க ஆசைப்படும் பரமபுண்யமான இப்பாரத பூமியில், அதிலும் அத்வைதிகளின் வம்சத்தில் பிறந்துள்ள நாம் மிகவும் பாக்யசாலிகள். ஆனால் பகவத்பாதர் உபதேசித்துள்ள வழிகளைப் பின்பற்றி நடந்தால்தான் நம் பிறவி பயனுள்ளதாக ஆகும்.

மத்யமாதிகாரிகளின் உபயோகத்திற்காக பகவத்பாதரால் அருளப்பட்ட பல நூல்களில் **ஆத்மபோதம்** என்பது எல்லாவிதத்திலும் உயர்ந்தது. இது ஆத்ம தத்வத் தை மிகச் சுலபமாக சுலபமாக உணர்த்துவதால் இதற்கு அமைந்த பெயர் மிகவும் பொருத்தமானது. விவேகசூடாமணி முதலான நூல்களெல்லாம் அத்வைத வேதாந்த ப்ரக்ரியைகளைப் பலவாறாக உணர்த்தியபோதிலும், அவை மிக விரிவானவை. இந்நூ லோவெனில் உருவத்தில் மிகச் சிறியதாயும், எல்லாக்கருத்துக்களையும் நன்கு காட்டுவதாயுமிருப்பதால் முமுக்ஷுக்களுக்கு இது மிகவும் உபயோகமாயிருக்கும். பல திருஷ்டாந்தங்களைக்கொண்டு உபதேசம் செய்யும் இச்சிறிய நூல் சாஸ்திர ரஹஸ்யங்களையும் ஆத்மதத்வத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் எடுத்துக் காட்டுகிறது.

எல்லோராலும் விரும்பி வரவேற்கப்படும் இந்த உயர்ந்த கிரந்தமானது இப்பொழுது ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதியிலிருந்து ஸ்ரீ சங்கர கிருபா பத்திரிகை மூலம் முதல் முறையாக தமிழ் அநுவாதத்துடன் வெளியிடப்படுவதை அறிந்து யார்தான் ஆனந்தமடையமாட்டார்கள்! தமிழ் அநுவாதத்தில் பத்மபாதாசார்யாளுடைய டீகையை யனுஸரித்து ஒவ்வொரு சுலோகத்திற்கும் அவதாரிகையும் ஆங்காங்கு பதங்களின் ஸ்வாரஸ்யமும் விசேஷக் கருத்துரைகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மிக எளிய நடையில் யாவருக்கும் ஸுலபமாகப் புரியும்படி விரிவாகவும் தெளிவாக வும் மிக அழகாகவும் எழுதியுள்ள தமிழ் அநுவாதம் ரஸிகர்களின் மனதைக் கவரும்படியமைந்திருக்கிறது. ஆஸ்திகர்கள் எல்லோரும் இந்நூலைப் படித்து பகவத்பாதருடையவும் பத்மபாதருடையவும் உயரிய கருத்துக்களையும் ஸ்வாரஸ்ய ங்களையும் அறிந்துகொள்வதுடன், மனத்திலும் நிலைபெறச் செய்து கிருதார்த்தர்களாக வேணுமாக பகவானை பிரார்த்திக்கிறோம்.

**ஸ்ரீ பாஷ்யஸ்வாமி**

॥ श्रीः ॥

# ॥ आत्मबोधः ॥

॥ ஸ்ரீ: ॥

# ॥ ஆத்மபோ³த⁴:ம் ॥

**ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது.**

**तपोभिः क्षीणपापानां शान्तानां वीतरागिणाम् ।**
**मुमुक्षूणामपेक्ष्योऽयमात्मबोधो विधीयते ॥ १ ॥**

**தபோபி⁴: க்ஷீணபாபாநும் ஶாந்தாநும் வீதராகி³ணும் ।**
**முமுக்ஷூணுமபேக்ஷ்யோ(அ)யமாத்மபோ³தோ⁴ விதீ⁴யதே ॥ 1 ॥**

(பரமேசுவராவதாரமான ஸ்ரீ சங்கர பகவத்பாதர் இப் பாரததேசம் முழுவதும் ஸஞ்சாரம் செய்து பற்பல துர்மதங்களைத் தொலைத்து அனுதியான ஸனுதன வைதிக மதத்தை ஸ்தாபித்ததோடு, உபநிஷத்து, பகவத்கீதை, ப்ரஹ்மஸூத்ரம் இம்மூன்றுக்கும் பாஷ்யமியற்றி ஔபநிஷதமான அத்வைத ஸித்தாந்தத்தை நிலைநிறுத்தினுர். மேற்கூறிய பாஷ்யங்களை மிகப் படித்த புத்திமான்களே அறியக் கூடுமாதலால், மற்றவர்களும் வேதாந்தக் கொள்கைகளை அறிந்துகொள்வதற்காக அநேக பிரகரணங்களை இயற்றினுர். இவைகளில் வேதாந்த தத்துவமானது நம் அனுபவத்திலுள்ள பற்பல திருஷ்டாந்தங்களாலும் யுக்திகளாலும் எளிதாகப் புரியும் ரீதியில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் **ஆத்மபோதம்** ஒன்று. இது 68 சுலோகங்கள் கொண்டது. இதில் ஆத்மாவுக்கும் சரீரத்திற்கும் உள்ள ஸம்பந்தமும், அதிலிருந்து ஆத்மாவைப் பிரித்துத் தெரிந்துகொள்ளும் முறையும், அதுவே ப்ரஹ்ம ஸ்வரூபம் என்றும், அந்த ப்ரஹ்மத்தின் லக்ஷணமும் ப்ரஹ்ம ஞானமே முக்திஸாத னமென்றும், முக்தலக்ஷணமும் விரிவாக உதாஹரணங்களால் விளக்கப்பட்டிருக்கி றது.)

கிருச்ரம், சாந்த்ராயணம், நித்யகர்மா, நைமித்திக கர்மா முதலியவைகளை முறைப்படி தவறுது செய்து வருவதால் பாபங்களும் அதனுலுண்டாகும் விருப்பு வெறுப்பு முதலான மனத்தோஷங்களும் விலகி மனதின் கலக்கமும் நீங்கி இவ்வுல கிலும் மேலுலகிலுமுள்ள பொருள்களில் ஆசை அடங்கி ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபடுவதையே வேண்டிநிற்கும் மாந்தர்களுக்காக இந்த **ஆத்மபோதம்** என்னும் நூல் இயற்றப்படுகிறது.

'**ஆத்மபோதம்**' என்னும் சொல்லிற்கு ஆத்மாவின் அறிவு என்பது பொருள். இந்நூலை வாசித்து இதில் கூறிய விஷயங்களை அடிக்கடி மனனம் செய்வதால் ஆத்மஞானம் ஏற்படும். ஆகவே இந்நூலுக்கும் '**ஆத்மபோதம்**' என்ற பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. ஆத்மவிசாரம் செய்வதற்கு நித்யாநித்ய வஸ்து விவேகம்,

வைராக்யம், சமாதி ஷட்கம், முமுக்ஷுத்வம் என்ற நான்கு ஸாதனங்களை யடைந்தவர்கள் தான் அதிகாரிகளாவார்கள் என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக் கிறது. இம் முதல் சுலோகத்தில் மூன்று ஸாதனங்கள் கூறப்பட்டிருக்கின்றன. நித்யாநித்ய வஸ்து விவேகம் என்னும் ஸாதனத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

மோக்ஷத்திற்கு ஆத்மஞானம் ஒன்றே ஸாதனம். ஆகவே மோக்ஷமடைய விருப்பங்கொண்டவர்கள் ஆத்மஞானமடைய முயலவேண்டும் மோக்ஷமடைவதில் தீவ்ரமான விருப்பம் ஏற்பட உலக ஸுகங்களில் வைராக்யம் வேண்டும். வைராக்ய மேற்பட ராகம், த்வேஷம் முதலான அந்தக்கரண தோஷங்கள் விலகவேண்டும். தோஷம் விலக முற்பிறவிகளில் செய்த பாபங்கள் நீங்கவேண்டும். பாபம் நீங்க பலனை விரும்பாமல் ஈசுவரார்பணபுத்தியுடன் கீதையில் கூறியுள்ளபடி ஸ்வதர்மத் தை அனுஷ்டிக்கவேண்டும்.

**'नित्यनैमित्तिकैरेव कुर्वाणो दुरितक्षयम्'**
**'यज्ञो दानं तपश्चेति पावनानि मनीषिणाम्'**

**'நித்யநைமித்திகைரேவ குர்வாணோ து³ரிதக்ஷயம்'**
**'யஜ்ஞோ தா³னம் தபஸ்சேதி பாவனானி மனீஷிணாம்'**

என்ற வசனங்களால் ஸ்வதர்மம் பாபங்களை நீக்குமென்று தெரிகிறது. ஆகவே ச்ருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் அவரவர்களுக்கு விதிக்கப்பட்ட தர்மங்களை பலனில் விருப்பம் கொள்ளாமல் பகவத் ப்ரீத்யர்த்தமாக முறைப்படி தவறாது அனுஷ்டித்து வந்தால் பாபங்களும் அதனால் உண்டாகும் தோஷங்களும் விலகி தீவ்ர வைராக்யம் ஏற்பட்டு மோக்ஷம் அடைய விருப்பமுண்டாகும். அவர்களுக்கு ஆத்மஞானம் ஏற்பட இந்நூல் உபகாரமாயிருக்கும். **(1)**

**(அவதாரிகை)** சாஸ்திரங்களில் மோக்ஷமடைய தவம், யோகம். மந்திர ஜபம், யாகம் முதலான பற்பல ஸாதனங்கள் கூறப்பட்டிருக்கும்பொழுது ஞானமொன்றே மோக்ஷமடைய உபாயம் என்று எவ்விதம் கூறமுடியும் என்ற கேள்விக்கு பதில் கூறுகிறார்: -

**बोधोऽन्यसाधनेभ्यो हि साक्षान्मोक्षैकसाधनम् ।**
**पाकस्य वह्निवज्ज्ञानं विना मोक्षो न सिध्यति ॥ २ ॥**

**போ³தோ⁴(அ)ன்யஸாத⁴னேப்⁴யோ ஹி ஸாக்ஷான்மோக்ஷைகஸாத⁴னம் ।**
**பாகஸ்ய வஹ்னிவஜ்ஜ்ஞானம் வினா மோக்ஷோ ந ஸித்⁴யதி ॥ 2 ॥**

மற்ற ஸாதனங்களைக் காட்டிலும் ஞானமொன்றே மோக்ஷத்திற்கு நேரிடை யான ஸாதனம். சமையலுக்கு நெருப்பைப்போல ஞானமில்லாமல் மோக்ஷமேற் படாது.

உபநிஷத்துக்களில் மோக்ஷமடைய கர்மா, பக்தி, யோகம், ஞானம் முதலான பற்பல ஸாதனங்கள் கூறப்பட்டிருப்பது உண்மைதான். ஆனுல் அவைகள் எல்லாம் ஒரே மாதிரியான நிஜலயில் உபாயமாவதில்ஜல. அவைகள் எல்லாம் நேரிடையாக வோ பரம்பரையாகவோ ஞானம் ஏற்பட உபாயமாகின்றன. ஞான மூலமாக அவை மோக்ஷத்திற்கு ஸாதனம் என்று கூறலாமேயொழிய நேரிடையாக மோக்ஷ ஸாதன மாகாது. ஞானமொன்றே மோக்ஷத்திற்கு நேரிடையான ஸாதனம். ஞானத்தைத் தவிற மற்ற ஸாதனங்கஜள ஸம்பாதித்தும் ஞானமேற்படாவிடில் மோக்ஷம் கிட்டாது. ஞானமேற்பட்டுவிட்டால் மோக்ஷமடைய வேறு ஸாதனங்கள் தேவையி ல்ஜல. ஞானம் ஒன்றினுலேயே அடியோடு அக்ஞானம் விலகி உடன் மோக்ஷ மேற்பட்டுவிடும். சமையல் செய்வதற்கு பாத்திரம், நீர், விறகு, நெருப்பு முதலான பல கருவிகள் தேவையாக இருந்தும் நெருப்பு ஒன்றுதான் முக்ய ஸாதனம். நெருப்பு இல்லாவிடில் சமையல் செய்யமுடியாது. இதுபோலவே சாஸ்திரங்களில் கூறிய எல்லா ஸாதனங்களும் ஞானத்தை உண்டுபண்ணுவதோடு நின்றுவிடுகின்றன. ஞானம் ஒன்றே மோக்ஷத்தைக் கொடுக்கிறது. **(2)**

**(அவதாரிகை)** சாஸ்திரங்களில் எத்தஜனயோ விதமான கர்மாக்கள் கூறப்பட்டி ருக்கின்றன. அதிலிருந்து ஏற்படும் பயனும் பலவீதம். கர்மாக்களின் சக்தி விசித்ர மானது; நம் மனதால் அளவிடமுடியாதது. ஆகவே அவைகளில் ஏதாவதொரு கர்மா வானது தன் விசித்ர சக்தியால் அக்ஞானத்தைத் தொஜலத்து மோக்ஷத்தைத் தருவதா கக் கூறலாமே! ஆத்மஞானம் எதற்காக? என்ற கேள்விக்கு பதில் கூறுகிறுர்: -

**अविरोधितया कर्म नाविद्यां विनिवर्तयेत् ।**
**विद्याऽविद्यां निहन्त्येव तेजस्तिमिरसंघवत् ॥ ३ ॥**

**அவிரோதி⁴தயா கர்ம நாவித்³யாம் விநிவர்தயேத் ।**
**வித்³யா(அ)வித்³யாம் நிஹந்த்யேவ தேஜஸ்திமிரஸங்க⁴வத் ॥ 3 ॥**

விரோதமில்லாததால் கர்மா அக்ஞானத்தைத் தொஜலக்காது. ஒளி இருஜளப் போக்குவதுபோல ஞானம்தான் அக்ஞானத்தைப் போக்கும்.

ஒரு பொருள் மற்றொரு பொருஜள அழிக்கவேண்டுமானுல் ஒன்றுக்கொன்று விரோதமிருக்கவேண்டும் என்பது உலக வழக்கம். சேதனப் பொருளிலும் இவ்வித மேதான். ஒரு மனிதன் மற்றொரு மனிதஜனக் கொன்றுன் என்றுல் இவனுக்கு அவனிடம் பகைமை உணர்ச்சி இருக்கிறது என்பது நிச்சயம். பூஜன எலியைக் கண்டமாத்திரத்தில் கொல்கிறது. கீரி பாம்பைக் கொல்கிறது. இவை பிறவியிலேயே விரோதம் கொண்டவை. ஒளிக்கும் இருளுக்கும் விரோதம் இருப்பதால் ஒளியைக் கண்ட மாத்திரத்தில் இருள் நீங்கிவிடுகிறது.

ஞானமும் அக்ஞானமும் ஒன்றுக்கொன்று விரோதமுள்ளவை. இவ்விரண் டும் சேர்ந்து ஒரே இடத்தில் இருக்காது. ஞானமிருந்தால் அக்ஞானம் இருக்காது. அக்ஞானமிருந்தால் ஞானமிருக்காது ஒருவனுக்கு ஒரே விஷயத்தில் அறிவும் இருக்கிறது, அறியாமையும் இருக்கிறது என்று சொல்லமுடியுமா? வெவ்வேறு

விஷயங்களில் அக்ஞானமும் ஞானமும் ஒருவனுக்கே இருக்கலாம். ஒருவனுக்கு ஒரு விஷயம் தெரிந்தும் தெரியாமலிருந்தால் அவனுக்கு ஞானம் சரியாக ஏற்படவி ல்லையென்றுதான் சொல்லவேண்டும். ஒரு விஷயம் நன்றாகத் தெரிந்து விட்டால் பிறகு கொஞ்சமேனும் அறியாமை இருக்க நியாயமில்லை. ஆத்ம விஷயத்தில் நமக்கு அக்ஞானமிருப்பதால்தான் அனாதிகாலமாக இந்த ஸம்ஸாரத்தில் பலவித துக்கங்களை அனுபவித்துக்கொண்டிருக்கிறோம். எல்லா துக்கங்களுக்கும் மூலகார ணம் அக்ஞானமே. ஆத்மா ஸச்சிதானந்த ஸ்வரூபமாயிருந்தும், அதை பிரத்யக்ஷ மாகத் தெரிந்துகொள்ளாததால் அந்த ஆனந்தத்தை அனுபவிக்க முடியவில்லை. துக்கங்களையே அனுபவிக்கிறோம். துக்கம் விலக அக்ஞானம் நீங்கவேண்டும். ஞானம் ஒன்றினால் தான் அக்ஞானம் நீங்கும்.

**'तमेव विदित्वाऽतिमृत्युमेति । नान्यः पन्था विद्यतेऽयनाय ।'**
**'तमेवं विद्वानमृत इह भवति । नान्यः पन्था अयनायं विद्यते ।'**

**'தமேவ விதி³த்வா(அ)திம்ருத்யுமேதி । நான்ய: பந்தா² வித்³யதே(அ)யனாய ।'**
**'தமேவம் வித்³வானம்ருத இஹ ப⁴வதி । நான்ய: பந்தா² அயனாயம் வித்³யதே ।'**

என்பது முதலான சுருதிகள் இதே கருத்தைத் தெரிவிக்கின்றன. அக்ஞானம் விலக ஞானத்தை அடையும் வழியில் செல்லாமல் வேறு என்ன காரியங்கள் செய்தாலும் பலனில்லை. லௌகிக விஷயங்களிலும் இப்படியேதான். ஒருவனுக்கு ஒரு சுலோக த்தின் பொருள் தெரியாமலிருந்து, தன்னிடமுள்ள அந்த அறியாமை நீங்கவேண்டு மென அவன் எண்ணினால் அதன் பொருளைத் தெரிந்துகொள்வதற்கு முயற்சி செய்கிறான். வித்வானிடம் போய்க் கேட்டோ, அல்லது தன் புத்தியால் நன்கு ஆலோசித்தோ தெரிந்துகொள்கிறானே தவிற, அதற்காக வேறு காரியம் செய்வதி ல்லை. அதை அறிந்ததும் அறியாமை தானாகவே விலகிவிடுகிறது.

இவ்வாறு ஞானத்திற்கும், அக்ஞானத்திற்கும் விரோதமிருப்பதுபோல, கர்மா வுக்கும் அக்ஞானத்திற்கும் கொஞ்சமும் விரோதம் கிடையாது. ஆகையால் எத்தனை கர்மாக்கள் செய்தபோதிலும் அக்ஞானம் ஒருபோதும் விலகாது. ஆசிரியரிடத்தில் போய் கற்றுக்கொள்ளாமல், இவன் எவ்வளவு வேலைகள் செய்தபோதிலும், இவனது அறியாமை கொஞ்சமாவது விலகுமா? தன்மேல் விழுந்த கயிற்றை ப்ரமத்தால் பாம்பென எண்ணி, அது கடித்து விட்டதாகவும் நினைத்து பயமடைந்தவனுக்கு, கயிற்றை நேரில் பார்த்து இது பாம்பல்ல, கயிறுதான் என்ற உண்மை ஞானம் ஏற்பட்டால்தான் அறியாமை விலகி பயம் நீங்குமே தவிற, அதல்லாமல் எத்தனை மந்திரங்கள் ஜபித்தாலும், அல்லது வேறு கர்மாக்களைச் செய்தாலும் அவனுடைய அறியாமை விலகுமா? பயம்தான் விலகுமா? ஆகவே அக்ஞானத்திற்கும் கர்மாவுக் கும் கொஞ்சமேனும் விரோதமில்லாததால் கர்மாவால் அக்ஞானம் விலகாது.

மேலும் அக்ஞானத்திற்கும் கர்மாவுக்கும் விரோதம் இல்லை என்பதுமட்டு மல்ல; நட்புமிருக்கிறது. எவனுக்கு ஆத்மவிஷயத்தில் அக்ஞானமிருக்கிறதோ அவன்தான் கர்மாவைச் செய்ய அதிகாரியாகிறான். கர்மாவைச் செய்வதற்கு **"अहं**

**कर्ता" "அஹம் கர்தா"** (நான் கர்மாவைச் செய்கிறவன்) **"अहं भोक्ता" "அஹம் போ⁴க்தா"** (கர்மாவினுல் ஏற்படும் பலஊை அநுபவிக்கிறவன்) என்ற அறிவு வேண்டும். உண்மையில் ஆத்மஸ்வரூபம் கர்த்தாவுமல்ல, போக்தாவுமல்ல இந்த உண்மையை அறிந்தவன் எப்படிக் கர்மாவைச் செய்ய முடியும்? **"तस्य कार्यं न विद्यते" "தஸ்ய கார்ய ந வித்³யதே"** (கீதை 8 - 17) என்று பகவான் கீதையில் கூறுகிறுர். ஸூத்ரபாஷ்யத்தில் ஸ்ரீ பகவத்பாதர்,

**'न वेदान्तवेद्यं अशनायाद्यतीतं अपेतब्रह्मक्षत्रादिभेदं असंसारि आत्मतत्वं अधिकारे अपेक्ष्यते, अनुपयोगात् अधिकारविरोधाश्च । 'तस्मात् अविद्यावद्विषयाण्येव प्रत्यक्षादीनि प्रमाणानि शास्त्राणि च ।'**

**'ந வேதா³ந்தவேத்³யம் அஶனயாத்³யதீதம் அபேதப்³ரஹ்மக்ஷத்ராதி³பே⁴த³ம் அஸம்ஸாரி ஆத்மதத்வம் அதி⁴காரே அபேக்ஷ்யதே, அனுபயோகா³த் அதி⁴காரவிரோதா⁴ஶ்ச । 'தஸ்மாத் அவித்³யாவத்³விஷயாண்யேவ ப்ரத்யக்ஷாதீ³னி ப்ரமாணுனி ஶாஸ்த்ராணி ச ।'**

(அத்யாஸ பாஷ்யம்)

என்று கூறுகிறுர். தான் இருப்பதற்கே அக்ஞானத்தின் உதவியை எதிர்பார்க்கும் கர்மாவானது எவ்வாறு அக்ஞானத்தைப் போக்கக்கூடும்? ஆதலால் அக்ஞானம் விலக ஞானத்தைத்தான் ஸம்பாதிக்கவேண்டும். ஒளி வந்தால் இருள் விலகுவது போல், ஆத்மஞானம் ஏற்பட்டால் கட்டாயம் அக்ஞானம் விலகும்.

**(அவதாரிகை)** மோக்ஷத்தையடைய ஆத்மாவை அறிந்துகொள்ளவேண்டும் என்றும் ஞானத்தால் அக்ஞானம் விலகுமென்றும் கூறப்பட்டது. இங்கு ஒவ்வொரு சரீரத்திலும் ஒவ்வொரு ஆத்மா இருக்கிறாரே! இதில் எந்த ஆத்மாவை அறிந்து கொள்வது? தன் சரீரத்திலுள்ள ஆத்மாவை மட்டும் தெரிந்துகொண்டால் போதுமா? அல்லது ஒவ்வொரு சரீரத்திலும் உள்ள ஒவ்வொரு ஆத்மாவையும் தெரிந்து கொள்ள வேண்டுமா? மேலும் அக்ஞானம் என்ற மறைவு நீங்கினுலும், நமக்கு ஆத்மா தெரிவதற்கு மற்றெரு பிரகாசம் தேவையா என்ற ஸந்தேஹங்களுக்கு விடை கூறுகிறார்: -

**अवच्छिन्न इवाज्ञानात् तन्नाशे सति केवलः ।**
**स्वयं प्रकाशते ह्यात्मा मेघापायेंशुमानिव ॥ ४ ॥**

**அவச்சி²ன்ன இவாஜ்ஞாஞத் தந்நாஶே ஸதி கேவல: ।**
**ஸ்வயம் ப்ரகாஶதே ஹ்யாத்மா மேகா⁴பாயேம்ஶுமானிவ ॥ 4 ॥**

அக்ஞானத்தால் (பலவாக) குறுகியவர்போல (காணப்படுகிற) ஆத்மா அந்த அக்ஞானம் ஒழிந்துவிட்டால் மேகம் நீங்கினுல் ஸூர்யன் தெரிவதுபோல ஒரே வஸ்துவாகத் தாஞகவே விளங்குகிறுர்.

உண்மையில் எல்லா சரீரங்களிலும் ஆத்மா ஒருவர் தான். ஆத்ம ஸ்வரூபத்தில் கொஞ்சமும் வேற்றுமை கிடையாது. வேற்றுமை எல்லாம் சரீரத்தில்தான். நமக்குப் பலவாருக இருக்கும் சரீரங்கள் தெரிகிறதே தவிர, அதைக்காட்டிலும் வேருன ஆத்ம ஸ்வரூபம் தெரிவதில்லை. ஆத்ம ஸ்வரூபம் தெரியாததாலும் வெவ்வேருன சரீரங்கள் மட்டும் தெரிவதாலும், அந்தந்த சரீரத்திலுள்ள ஆத்மாவும் வெவ்வேறு என்று ப்ரமத்தால் நிஜைக்கிரேம். இது மட்டுமா! சரீரம் பெரியதாகவும், சிறியதாகவும், உயரமாயும், குட்டையாயும் இருப்பதைக்கொண்டு ஆத்மாவையும் பெரியது, சிறியது, உயரம், குட்டை என்றெல்லாம் சொல்கிரேம். உண்மையில் இவையெல்லாம் ஆத்மாவில் கிடையாது. நன்கு விசாரித்து சரீரத்தைக்காட்டிலும் வேருன, அத்துடன் ஸம்பந்தப்படாத ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ளாததால் இந்த ப்ரமம் ஏற்பட்டிருக்கிறது. பொருள் ஒன்ருக இருந்தாலும் ப்ரமத்தால் பலவாருகத் தோன்றுவதை உலகில் காணலாம். இரவில் ஆகாயத்தில் மேகங்கள் ஒன்றுமில்லாமல் சந்திரன் ஸ்வச்சமாகப் பிரகாசிக்கும்பொழுது வாசலில் நான்கு பாத்திரங்களில் ஜலத்தை நிரப்பி அதில் பார்த்தோமானுல் ஒவ்வொரு பாத்திரத்திலும் ஒவ்வொரு சந்திரன் தோன்றும். சிறு பையன் அதைப் பார்த்து நான்கு சந்திரர்கள் இருப்பதாகச் சொல்லுவான். அந்த ஜலம் காற்றினுல் அசைந்தால் சந்திரனே அசைவதாகக் கூறுவான். விவேகியான நாம் அப்படி நிஜைப்போமா? சந்திரன் ஒருவன்தான். அவன் அசையவுமில்லை. ஜலம்தான் நான்காகப் பிரிந்திருக்கிறது. அதுதான் அசைகிறது. அதனுல் சந்திரன் நான்குபோலவும் அசைவதுபோலவும் தோன்றுகிறதே தவிற, உண்மையில் அப்படியல்ல என்றுதானே நாம் சொல்வோம். இதே போலத்தான் எங்கும் நிறைந்த ஒரே வஸ்துவான ஆத்ம ஸ்வரூபம் சரீர பேதத்தால் அநேகம் போலவும், அதன் தர்மங்களோடு கூடியதுபோலவும் தோன்றுகிறதே தவிர இது உண்மையல்ல. இதே கருத்தைத்தான்,

**‘एक एव हि भूतात्मा भूते भूते व्यवस्थितः ।**
**एकधा बहुधा चैव दृश्यते जलचन्द्रवत् ॥'**

**'यथा ह्ययं ज्योतिरात्मा विवस्वान्**
**अपो भिन्ना बहुधैकोऽनुगच्छन् ।**
**उपाधिना क्रियते भेदरूपः**
**देव : क्षेत्रेष्वेवमजोऽयमात्मा ॥**

**‘ஏக ஏவ ஹி பூ4தாத்மா பூ4தே பூ4தே வ்யவஸ்தி2த: ।**
**ஏகதா4 ப3ஹுதா4 சைவ த்3ருஶ்யதே ஜலசந்த்3ரவத் ॥'**

**'யதா2 ஹ்யயம் ஜ்யோதிராத்மா விவஸ்வான்**
**அபோ பி4ன்ன ப3ஹுதை4கோ(அ)னுக3ச்ச2ன் ।**
**உபாதி4னா க்ரியதே பே4த3ரூப:**
**தே3வ : க்ஷேத்ரேஷ்வேவமஜோ(அ)யமாத்மா ॥**

என்ற சுருதிகள் தெரிவிக்கின்றன. ஆகாசம் ஒரே பொருள். அது எங்கும் நிறைந்தது. ஆனாலும் குடத்திலுள்ள ஆகாசத்தைச் சிறியது என்றும், அண்டாவிலுள்ளதைப் பெரியது என்றும் பலவாறாகச் சொல்லுவதில்லையா இதெல்லாம் உண்மையா? ஒரே பொருளுக்கு உபாதியால் வேற்றுமைகள் தோன்றுகின்றன. ஒருபொருள் பலவாகத் தோன்றுவதற்கு எது காரணமாக இருக்கிறதோ, அதற்கு **உபாதி** என்று பெயர். சந்திரனுக்கு ஜலம் போலும், ஆகாசத்திற்கு குடம் முதலானவை போலும், ஆத்மாவுக்கு சரீரங்கள் உபாதிகளாகின்றன. இதெல்லாம் எங்கும் நிறைந்த ஒரே பொருளான ஆத்மஸ்வரூபத்தை நன்கு விசாரித்துத் தெரிந்து கொள்ளாத வரையில் தான். உண்மையில் அத்வைதப்பொருளான ஆத்மவஸ்துவைக்காட்டிலும் வேறாக ஒன்றும் உலகில் கிடையாது. ஞானிக்கு அவ்வித ஆத்ம ஸ்வரூபம் விளங்கும்.

ஆத்மஸ்வரூபமானது ஸ்வயம்ப்ரகாசவஸ்துவானதால், அது விளங்க மற்றொரு பிரகாசம் தேவையில்லை. உலகில் சூர்யன், சந்திரன், அக்னி முதலானவை பிரகாசிக்கும் பொருள். புஸ்தகம், வஸ்திரம் முதலியவை பிரகாசிக்காத பொருள்கள். இவற்றில் சூர்யன், சந்திரன் முதலான பிரகாசிக்கும் பொருளைப் பார்க்க மற்றொரு வெளிச்சம் தேவையில்லை. பின்னால் கூறிய பிரகாசிக்காத பொருள் விளங்க வெளிச்சம் வேண்டும். ஸூர்யனை மேகம் மறைத்திருக்கிறது. ஸூர்யனைப் பார்க்கவேண்டுமானால் மேகம் நீங்கினால் மட்டும் போதும். மற்றொரு வெளிச்சத்தின் உதவி தேவையில்லை. இதை மற்றொரு உதாஹரணத்தால் விளக்கலாம். இரவில் பூட்டியிருக்கும் ஓர் இருட்டு அறையில் இருக்கும் புஸ்தகத்தைப் பார்க்கவேண்டுமானால் கதவைத்திறந்தால் மட்டும் போதாது. கையில் தீபத்தையும் கொண்டு போக வேண்டும். கதவைத் திறந்து கையிலிருக்கும் தீபத்தின் உதவியாலோ, அல்லது அங்கு இருக்கும் எலெக்ட்ரிக் விளக்கை ஏற்றி அதன் உதவியாலோ புஸ்தகத்தைப் பார்க்கலாம். வெளிச்சமில்லாவிட்டால் புஸ்தகத்தைப் பார்க்கமுடியாது. ஆனால் அதே அறையில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் வெளிச்சத்தைப் பார்க்க வேண்டுமானால், கதவைத் திறந்தால் மட்டும் போதும். மற்றொரு வெளிச்சம் வேண்டியதில்லை. அறையிலுள்ள வெளிச்சத்தைப்பார்க்க ஒருவரும் கையில் தீபத்தை எடுத்துச் செல்வதில்லை. இதுபோலவே ஆத்மா ஸ்வயம் பிரகாச வஸ்து. அது விளங்க மற்றோர் பிரகாசம் தேவையில்லை. மேலும் உலகில் உள்ள பிரகாசப் பொருள்களெல்லாம் ஆத்ம பிரகாசத்தால்தான் பிரகாசிக்கின்றன. அப்படியிருக்க, அவை எப்படி ஆத்மாவை பிரகாசப்படுத்தக்கூடும்?

உள்ளுக்குள் தீபம் பிரகாசித்துக்கொண்டிருந்தாலும் கதவு சாற்றியிருந்தால் நமக்குத் தெரிவதில்லை. கதவைத் திறந்த மாத்திரத்தில் அது தெரிகிறது. ஆத்மா ஸ்வயம் பிரகாசமாயிருந்தாலும், அக்ஞானம் மூடியிருப்பதால் ஆத்ம பிரகாசம் நமக்குத் தெரிவதில்லை. ஞானத்தால் அக்ஞானம் விலகின பிறகு, ஸ்வயம்பிரகாசமான ஆத்ம ஸ்வரூபம் தானாகவே வேறுபிரகாசத்தின் உதவியில்லாமலே ஞானிக்கு விளங்குகிறது. **(4)**

**(அவதாரிகை)** ஆத்மஞானிக்கு ஞானபலத்தால் அக்ஞானம் விலகி, அக்ஞான த்தால் ஏற்பட்ட ப்ரமம் நீங்கி எல்லாம் ஆத்மஸ்வரூபமாக விளங்கினுலும், ஆத்மாவுடன் அவனுக்கு இப்பொழுது புதிதாக ஏற்பட்டிருக்கும் ஆத்மஞானம் ஒன்று கூட இருப்பதால் த்வைதமாகிவிடாதா? அத்வைதம் எப்படி ஸித்திக்கும்? இரண்டு வஸ்துவாகிவிட்டதே. ஞானம் நீங்கிவிட்டால் எப்படி அவன் ஞானியாக இருக்க முடியும்? ஆகவே **केवल: आत्मा प्रकाशते கேவல: ஆத்மா ப்ரகாஶதே** என்று முன் சுலோகத்தில் கூறியது எப்படிப் பொருந்தும்? என்ற கேள்விக்கு விடைகூறுகிறார்: -

**अज्ञानकलुषं जीवं ज्ञानाभ्यासाद्विनिर्मलम् ।**
**कृत्वा ज्ञानं स्वयं नश्येत् जलं कतकरेणुवत् ॥ ५ ॥**

**அஜ்ஞானகலுஷம் ஜீவம் ஜ்ஞாநாப்⁴யாஸாத்³விநிர்மலம் ।**
**க்ருத்வா ஜ்ஞானம் ஸ்வயம் நஶ்யேத் ஜலம் கதகரேணுவத் ॥ 5 ॥**

அக்ஞானத்தால் கலங்கிய ஜீவனை ஞானமானது, வெகுகாலம் ஞானாப்யாஸம் செய்வதால் கலக்கமற்றவனைகச் செய்து தேத்தாங்கொட்டைப் பொடியானது (கலங்கிய) தண்ணீரைத் தெளிவானதாகச் செய்து தானும் மறைந்து போவது போல ஞானமும் மறைந்து விடுகிறது.

ஆத்மஸ்வரூபம் எப்பொழுதும் சுத்தமாயும் நிர்மலமாயுமுள்ளது அது அக்ஞா னத்தால். மிகவும் கலங்கி விட்டது. ஜீவன் "நான்" என்று சொல்லும்பொழுது தேஹத்தையும் ஆத்மாவையும் சேர்த்தேதான் பேசுகிறுன். தேஹத்திலுள்ள தர்மங் களையெல்லாம் ஆத்மாவிலிருப்பதாக எண்ணுகிறுன். உண்மையில் ஆத்மா அகர்த்தா வாகவும் (செய்யாதவன்) அபோக்தா (அனுபவியாதவன்) வாகவும் இருந்தாலும், நான் கர்த்தா (செய்கிறவன்) நான் போக்தா (அனுபவிக்கிறவன்) என்று சொல்கிறுன். சரீர மும் ஆத்மாவும் ஒன்றுக்கொன்று பிரிக்க முடியாதபடி ஒன்ருக சேர்ந்துவிட்டதால், கர்த்தாவாகவும் போக்தாவாகவும் இருக்கும் சரீரத்தோடு ஸம்பந்தப்பட்ட ஆத்மா வையும் கர்த்தா, போக்தா என்று சொல்கிறுன். இது எல்லாம் அக்ஞானத்தினுலேற் பட்டது.

ஆத்மவிசாரம் செய்து சிரவணமனனுதிகளை வெகு காலம் அப்யஸித்து வந்தால் இவனுக்கு ஆத்மஞானம் ஏற்படுகிறது. அப்பொழுது ஜீவன் தன் ஸ்வரூபத் தை தேஹாதி விலக்ஷணமாயும், தேஹ தர்மங்கள் ஒன்றுமே இல்லாததாகவும், அகர்த்தாவாகவும் அபோக்தாவாகவும், சுத்த சின்மாத்ரமாகவும் தெரிந்து கொள்கிறுன். இவ்வித ஞானமேற்பட்ட மாத்திரத்தில் அக்ஞானம் போய் விடுகிறது. அக்ஞானத்தால் ஏற்பட்ட கலக்கமும் நீங்கி விடுகிறது. தேஹ தர்மங்களுடன் சேர்த்தே ஆத்மாவைத் தெரிந்துகொண்டதால் கலக்கம் இருந்தது. தேஹ விலக்ஷ ணமாக சுத்தமாக அறிந்துகொண்டுவிட்டதால் கலக்கம் போய்விடுகிறது. ஜீவஸ்வரூபம் நிர்மலமாகி விட்டது. இவ்வாறு ஞானமானது அக்ஞானத்தை நீக்கி, கலக்கத்தைப் போக்குவதோடு, தானும் மறைந்துவிடுகிறது. மழைகாலத்தில் நதியில் ஜலம் மிகவும் கலங்கியிருக்கும். அந்தத் தண்ணீரை வீட்டுக்குக் கொண்டுவந்து,

அதிலுள்ள கலக்கம் போவதற்காக, தேத்தாங்கொட்டைப் பொடியை அத்தண்ணீரில் போடுவது வழக்கம். அப்பொடியானது ஜலத்திலுள்ள வண்டலையெல்லாம் அடியில் படியும்படி செய்வதுடன், தானும் அடியில் படிந்துவிடும். ஜலம் தெளிவானதாக ஆகிவிடும். இதுபோலவே ஞானமும் அக்ஞானத்தைப் போக்குவதுடன், தானும் போய் விடுகிறது. கடைசியில் மிஞ்சுவது அத்வைதமான ஆத்மவஸ்து ஒன்றுதான், வேறொன்றுமில்லை. ஆகையால் ஆத்மா அத்வைதம் என்பதற்கு ஒருவித விரோதமு மில்லை.

வேறொரு உதாஹரணமும் பார்க்கலாம். காட்டில் மூங்கில் ஒன்றுக்கொன்று உராய்ந்துகொள்வதால், திடீரென நெருப்புப் பிடித்துவிடுகிறது. அந்த நெருப்பானது அம்மரங்களையெல்லாம் எரித்துச்சாம்பலாக்கி விட்டு, கடைசியில் தானும் அணைந்து விடுகிறது. பின்னால் அங்கு மரமுமில்லை, நெருப்புமில்லை. மிஞ்சியிருப்பது சாம்பல் தான். இதுபோலவேதான் ஞானமானது அக்ஞானத்தையும் அதனால் ஏற்பட்ட காரியங்கள் எல்லாவற்றையும் அழித்துவிட்டு, தானும் அழிந்துவிடுகிறது.

இங்கு ஒரு விஷயத்தை நாம் முக்யமாக அறிந்து கொள்ளவேண்டும். இந்த சுலோகத்தில் ஞானம் என்ற சொல் விருத்தி ஞானத்தைக் குறிக்கும். ஞானம் இரண்டு விதம். ஒன்று விருத்தி ஞானம். இரண்டாவது ஸ்வரூப ஞானம். ஸ்வரூப ஞானமென்பது சைதன்யம். விருத்தி ஞானமென்பது மனத்தின் பரிணாமம் (மாறு பாடு). ஞானம் என்ற சொல் ஆத்ம சைதன்யத்தையே முக்யமாகக் குறிப்பதாயிருந் தாலும், கௌணமாக விருத்தியையும் குறிக்கலாம். கோவிலில் கோவிலில் ஸ்வாமியைப் பார்க்கிறோம். ஸ்வாமியின் உருவம் மாதிரி மனம் ஆகிவிடுகிறது. மனம் கண்ணாடிபோல் ஸ்வச்சமாயிருப்பதால் அதில் ஆத்ம சைதன்யம் பிரதிபிம்பிக் கிறது. இதுதான் ஞானம் என்று சொல்லப்படுகிறது. ஞானஸ்வரூபமான சைதன்யத் தின் பிரதிபிம்பம் உள்ளேயிருப்பதால் விருத்திக்கும் ஞானம் என்று பெயர். எந்த விஷயத்தின் உருவத்தை மனது அடைகிறதோ, அந்த விஷயத்தின் ஞானம் ஏற்படுகிறது. ஆத்மாகாரமான மனோவிருத்திக்கு ஆத்மஞானம் என்று பெயர். சைதன்யப் பிரதிபிம்பத்துடன் கூடிய ஆத்மாகார விருத்தியானது அக்ஞானத்தையும் அதன் காரியங்களையும் அழித்துவிடுகிறது. பிறகு ஜடமான அந்த மனோவிருத்தியும், மூங்கிலில் பிடித்துக்கொண்ட நெருப்புப்போலவும், தேத்தாங்கொட்டைப் பொடி போலவும் தானும் அழிந்து விடுகிறது. கண்ணாடியில் தெரியும் பிரதிபிம்பம் கண்ணாடி உடைந்துவிட்டால், பிம்பத்துடன் ஒன்றாகக் கலந்துவிடுவது போல, மனோவிருத்தியில் தோன்றின பிரதிபிம்பமும், விருத்தி மறைந்தவுடன் பிம்பமான ஆத்மசைதன்யத்துடன் ஒன்றாகிவிடுகிறது. ஆகவே, கடைசியில் மிஞ்சுவது அத்வைதமான ஆத்மவஸ்து ஒன்றுதான், ஆத்மஞானிக்கு விருத்தி ஞானம் நீங்கினாலும் ஸ்வரூப ஞானம் எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டு இருப்பதால் அவனை ஞானி என்று கூறுவதில் தவறு ஒன்றுமில்லை.

**(அவதாரிகை)** முன் சுலோகத்தில் ஞானம் அக்ஞானத்தை அழித்து அதன் மூலம் எல்லாவற்றையும் அழித்துவிடுகிறது என்று கூறப்பட்டது. இதனால் பிரபஞ்சம் அக்ஞானத்தால் ஏற்பட்டதாக தெரிகிறது. அப்படியானால் பிரபஞ்சம் பொய்

என் என்று ஏற்படுகிறது. உண்மைப் பொருள் அக்ஞானத்தால் அழிந்ததாக ஒரு இடத்திலும் பார்த்ததில்லை. ஆனால் நேரில் கண்டு அனுபவிக்கும் இப்பிரபஞ்சத்தை எவ்வாறு இல்லை என்று சொல்லமுடியும்? என்னும் கேள்வி வர, திருஷ்டாந்தத்தால் பிரபஞ்சம் பொய் என்பதை நிரூபணம் செய்கிறார்: -

**संसारः स्वप्नतुल्यो हि रागद्वेषादिसंकुलः ।**
**स्वकाले सत्यवद्भाति प्रबोधे सत्यसद्भवेत् ॥ ६ ॥**

**ஸம்ஸார: ஸ்வப்னதுல்யோ ஹி ராக³த்³வேஷாதி³ஸங்குல: ।**
**ஸ்வகாலே ஸத்யவத்³பா⁴தி ப்ரபோ³தே⁴ ஸத்யஸத்³ப⁴வேத் ॥ 6 ॥**

ராகம், த்வேஷம் முதலியவை நிறைந்த ஸ்வப்னத்திற்கு ஒப்பான ஸம்ஸாரமானது தானிருக்கும் ஸமயம் (ஞானத்திற்கு முன்) உண்மையானதுபோலவே தோன்றுகிறது. ஞானம் ஏற்பட்டுவிட்ட பிறகு பொய்யாக ஆகிவிடும்.

பிரபஞ்சத்தை ஸம்ஸாரம் என்று சாஸ்திரங்களில் கூறுவது வழக்கம். இப்பிரபஞ்சத்திலுள்ள பொருள்கள் எல்லாம் நம்முடன் ஸம்பந்தப்படாமல் இருக்கும்வரை நமக்கு ஒருவிதத் தீங்கையும் உண்டுபண்ணுவதில்லை. நமக்கு வேண்டும் பொருள்களில் விருப்பும், வேண்டாப் பொருள்களில் வெறுப்பும் ஏற்பட்டு அவைகளோடு நாம் சேரும்பொழுதுதான் நமக்கு தீங்கு ஏற்படுகிறது. இந்தத் தீமை விலக பிரபஞ்சத்தை அழிக்கவேண்டியது அவசியமில்லை. இது ஸாத்யமுமல்ல. இவைகளில் ராகத்வேஷங்கள் ஏற்படாமலிருந்தால் போதும்.

**इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।**
**तयोर्न वशमागच्छेत् तौ ह्यस्य परिपन्थिनौ ॥**

**இந்த்³ரியஸ்யேந்த்³ரியஸ்யார்தே² ராக³த்³வேஷௌ வ்யவஸ்தி²தௌ ।**
**தயோர்ன வஶமாக³ச்சே²த் தௌ ஹ்யஸ்ய பரிபந்தி²னௌ ॥**

(கீதை 3-34)

(கண், காது முதலான இந்திரியங்களின் விஷயங்களான சப்தம் முதலியவை ஒவ்வொன்றிலும் ராகமோ த்வேஷமோ கட்டாயம் ஏற்படுகின்றன. அவைகளுக்கு வசமாக ஆகக் கூடாது. அவைதான் மனிதனைக்கெடுக்கின்றன) என்று பகவான் கீதையில் கூறியுள்ளார். அதனால்தான் இங்கு ஆசார்யார் ஸம்ஸாரம் என்னும் சொல்லிற்கு

**रागद्वेषादिसंकुलः**

**ராக³த்³வேஷாதி³ஸங்குல:**

என்னும் அடைமொழி கொடுத்திருக்கிறார். ஞானிகள் நம்மைப்போலவே இப்பிரபஞ்சத்தில் பழகினாலும், அவர்களுக்கு ராகத்வேஷமில்லாததால் ஒரு அனர்த்தமும் ஏற்படுவதில்லை. ஒவ்வொரு மனிதனும் தன் தன் ஸ்வபாவப்படிதான் காரியங்களைச்

செய்கிறன். ஸ்வபாவமென்பது முற்பிறவிகளில் செய்த புண்யபாபங்களின் ஸம்ஸ்காரம். அந்த ஸ்வபாவம் பொருள்களில் மனிதனுக்கு ராகத்தையும் த்வேஷத் தையும் உண்டுபண்ணித்தான் ஏவுகின்றன. அதனுல் மேலும் புண்யத்தைச் செய்யா மல் பாபத்தைச் செய்கிறன். நல்லோர்களின் சேர்க்கையாலும் சாஸ்திராப் யாஸத் தாலும் எவன் ராகத்வேஷங்களை அடக்குகிறனே அவன் தன் ஸ்வபாவத்தையும் கட்டுப்படுத்துகிறன். ராகத்வேஷங்களை விலக்குவதில் தான் தன் முயற்சியும் சாஸ் திரமும் உபயோகப்படுகிறது.

இந்த ராகத்வேஷங்கள் நீங்க உபாயம் கூறுகிறர். இப்பிரபஞ்சத்திலுள்ள பொருள்களின் தன்மையைப்பற்றி நன்கு விசாரிக்கவேண்டும். விசாரித்துப் பார்த்தோ மானுல் பிரபஞ்சம் பொய் என்பதாகவே முடிவு ஏற்படும். நேரில் பார்ப்பதைக் கொண்டு ஒரு பொருளை உண்மையென்று தீர்மானிக்கமுடியாது. இரவு தூக்கத்தில் ஸ்வப்னம் காண்கிறேம். அங்கு காணும் பொருள்களில் ஒன்றுவது உண்மையல்ல என்பது எல்லோராலும் ஒப்புக்கொண்ட விஷயம். காலையில் எழுந்தபிறகு ஸ்வப்னப் பொருள்கள் ஒன்றுவது இருப்பதில்லை, எல்லாம் மறைந்துவிடுகிறது. ஆனுலும் ஸ்வப்னம் காணும் சமயம் ஒருவருக்காவது அது பொய் என்று தெரிவதில்லை. உண்மையென்று நினைத்துத் தான் பார்க்கிறர்கள். விழித்துக்கொண்டவுடன் தான் பொய் என்று தெரிகிறது. ஆகவே பொருள்கள் பொய்யாயிருந்தாலும் உண்மை போலவே தோன்றும் தன்மை உண்டு என்று தெரிகிறது. ஸ்வப்னம் போலவேதான் ஜாக்ரத் (விழித்துக்கொண்டிருக்கும்) காலத்தில் நாம் பார்க்கும் பொருள்களும் உண்மையல்ல, பொய்தான். இப்பொழுது நமக்கு உண்மைபோல் தோன்றினுலும் ஞானம் வந்தபிறகு பொய்யாக ஆகிவிடும்.

இவ்வாறு ஸ்வப்ன திருஷ்டாந்தத்தைக்கொண்டு பிரபஞ்சம் பொய் என்பதை தீர்மானமாகத் தெரிந்துகொண்டு விட்டோமானுல் அவைகளில் ராகமோ த்வேஷ மோ ஏற்பட நியாயமில்லை. ஸ்வப்னத்தில் பரர்த்த பொருளில் யாருக்காவது ஆசை ஏற்படுகிறதா? ஆகையால் ராக த்வேஷம் விலகி ஸம்ஸார துக்கம் ஏற்படாம லிருக்க, விசாரித்து ப்ரமாணங்களாலும் யுக்திகளாலும் பிரபஞ்சம் பொய் என்பதை அறிந்துகொள்ளவேண்டும். **(6)**

**(அவதாரிகை)** பிரபஞ்சம் பொய் என்பதற்கு ஸ்வப்னத்தை திருஷ்டாந்தமாகக் கூறினர். இதில் மற்றேர் திருஷ்டாந்தத்தைக்கூறி அதை உறுதிப்படுத்துகிறர்: -

**तावत्सत्यं जगद्भाति शुक्तिकारजतं यथा ।**
**यावन्न ज्ञायते ब्रह्म सर्वाधिष्ठानमद्वयम् ॥ ७ ॥**

**தாவத்ஸத்யம் ஜக³த்³பா⁴தி ஶுக்திகாரஜதம் யதா² ।**
**யாவன்ன ஜ்ஞாயதே ப்³ரஹ்ம ஸர்வாதி⁴ஷ்டா²னமத்³வயம் ॥ 7 ॥**

எதுவரை எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாயும், இரண்டற்றதுமான ப்ரஹ்ம ஸ்வரூபம் அறியப்பட வில்லையோ, அதுவரை, கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி போல பிரபஞ்சமும் உண்மையாகத் தோன்றும்

உலகமெல்லாம் பொய் என்று சாஸ்திரங்கள் யுக்திகளால் தீர்மானித்துக் கூறுகின்றன. ஆனுலும் உலகைப் பார்க்கும் யாவருக்கும் அது உண்மை என்று புலப்படுகிறதே தவிற, ஒருவருக்காவது உலகம் பொய் என்று தோன்றுவதில்ஂலயே. இது ஏன் என்று கேட்கலாம். இதற்கு திருஷ்டாந்த மூலம் பதில் கூறுகிருர். ஒருவன் வழியிலிருக்கும் கிளிஞ்சஂலப் பார்க்கிருன். அதன் மேல் பக்கம் கொஞ்சம் பளபளப் பாக இருக்கும். அதை ஊன்றிப் பார்க்காமல் மேலாக மட்டும் பார்த்தபடியால், அதில் தோன்றும் பளபளப்பைக்கொண்டு வெள்ளி தீர்மானித்து அதை எடுத்து மடியிலும் வைத்துக்கொள் கிறான். உண்மையில் அது வெள்ளியல்ல. கிளிஞ்சல்தான். வெள்ளி என்பது பொய்தான். ஆனாலும் அவனுக்கு உண்மை வெள்ளியாகவே தோன்றுகிறது. இதனால் பொய்யாயிருந்தாலும் உண்மைபோல் தோன்றும் என்று தெரிகிறது. அது வெள்ளியல்ல என்று பிறர் சொன்னாலும் நம்பிக்கை வருவதில்லை. எப்பொழுது அதைக் கையில் எடுத்து நன்கு ஊன்றிக் கவனித்து, அதன் அடிப்பக்கத்தில் உள்ள கருப்பு நிறத்தையும் பார்த்து இது கிளிஞ்சல்தான், வெள்ளியல்ல என்று தெரிந்து கொள்கிருனே, அப்பொழுது வெள்ளி மறைந்துவிடுகிறது. இதுவரை எனக்கு வெள்ளி யாகத் தோன்றினது பொய்தான் என்று தெரிந்துகொள்கிருன். அதுவரை அது உண்மை வெள்ளியாகவேதான் அவனுக்குத் தோன்றும். இதில் உண்மைப் பொரு ளான கிளிஞ்சலுக்கு **அதி⁴ஷ்டா²னம்** (**अधिष्ठानं**) என்று பெயர். அதில் பொய்யாகத் தோன்றின வெள்ளிக்கு **அத்⁴யஸ்தம்** (**अध्यस्तं**) என்று பெயர். வெள்ளிக்க கிளிஞ்சல் அதிஷ்டானமாவது போல் பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் ப்ரஹ்மம் அதிஷ்டானமா கிறது. ப்ரஹ்மஸ்வரூபத்தை நன்கு ஸாக்ஷாத்தாகத் தெரிந்துகொள்ளாததால், அது மறைந்து பிரபஞ்சம் தோன்றுகிறது உண்மையாகவும் அது தோன்றுகிறது. நன்கு ஊன்றிப் பார்த்து இது கிளிஞ்சல்தான் என்று தெரிந்துகொண்டவுடன் வெள்ளி பொய் என்று அறிவது போல, ஸ்ரீ ஸத்குருவின் உபதேசத்தால் உபநிஷத்துக்கள் மூலம் ப்ரஹ்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்தாக எப்பொழுது பார்க்கிருனே, அப்பொழுது அவனுக்கு பிரபஞ்சம் பொய் என்பது தெரிந்துவிடும். அதுவரை உண்மையாகத்தான் தோன்றும். சாஸ்திரங்கஂள வாசித்து ப்ரஹ்மத்தைப்பற்றிப் பலர் தெரிந்து கொண்டிரு ந்தாலும் அவர்களுடைய ஞானம் பரோக்ஷஞானம்தான். பரோக்ஷஞானம் அக்ஞானத் தைப் போக்காது. அபரோக்ஷ ஞானம்தான் அக்ஞானத்தைப் போக்கும். அவர்களுக்கு அபரோக்ஷஞானமேற்படாததால் உலகம் உண்மையாகவே தோன்றிக்கொண்டிருக் கிறது. ராத்திரி தூக்கத்தில் ஸ்வப்னம் காணும்பொழுது ஒருவருக்காவது அது பொய் என்று தோன்றுவதில்ஂல. உண்மை போலவேதான் பார்க்கிருர்கள். காஂலயில் விழித்துக் கொண்டதும் எல்லோருக்கும் இரவில் கண்டதெல்லாம் பொய் என்பது நிச்சயமாகத் தெரிகிறது. **(7)**

**(அவதாரிகை)** கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவதுபோல ப்ரஹ்மத்தில் பிரபஞ்சம் தோன்றுவதால் பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் ப்ரஹ்மமே அதிஷ்டானம் என்று கூறப்பட்டது. உலகில் அதிஷ்டானப் பொருள் உண்மையாகவும், ஆரோபித வஸ்து பொய்யாகவும் இருப்பதைப் பார்த்து இருப்பதால், அந்த நியாயத்தால் அதிஷ் டானமான ப்ரஹ்மமே வாஸ்தவமென்றும் ஆரோபிதமான பிரபஞ்சம் பொய்யென் றும் கூறப்பட்டது. இப்பொழுது பிரபஞ்சத்திற்கு ப்ரஹ்மம் உபாதான காரணமாயிரு ப்பதாலும் கார்யமான பிரபஞ்சம் பொய் என்பதை நிரூபணம் செய்கிருர்: -

**उपादाने खिलाधारे जगन्ति परमेश्वरे ।**
**सर्गस्थितिलयान् यान्ति बुदबुदानीव वारिणि ॥ ८ ॥**

**உபாதா³னே கி²லாதா⁴ரே ஜக³ந்தி பரமேஶ்வரே ।**
**ஸர்க³ஸ்தி²திலயான் யாந்தி பு³த³பு³தா³னீவ வாரிணி ॥ 8 ॥**

எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் உபாதான காரணமாகவுமுள்ள பரமேசுவரனிடத்தில், தண்ணீரில் நீர்க்குமிழிகள் தோன்றி, இருந்து, மறைந்து போவதுபோல, உலகமெல்லாம் உண்டாகி, இருந்து அழிந்துபோகின்றன.

தண்ணீரில் குமிழிகளை நாம் பார்க்கிறோம். அவைகள் நீரிலிருந்தே உண்டாகின்றன. அவை இருப்பதும் நீரில்தான். நீரைவிட்டுத் தனியாக வேறு இடத்தில் இருப்பதில்லை கடைசியில் நீரிலேயே மறைந்தும் போகின்றன. ஆகையால் அவைகளுக்கு நீர் உபாதான காரணமாகிறது. இதுபோல உலகமெல்லாம் ப்ரஹ்மத்திலிருந்து உண்டாகின்றன. நடுவில் இருப்பதும் ப்ரஹ்மத்தில்தான். கடைசியில் ப்ரஹ்மத்தில்தான் மறைந்து போகின்றன. ஆகவே பிரபஞ்சத்திற்கு ப்ரஹ்மம் உபாதான காரணமாகிறது.

வேதாந்த நூல்களில் காரணத்தை இரண்டுவிதமாகப் பிரித்திருக்கிறார்கள். ஒன்று உபாதான காரணம், மற்றொன்று நிமித்த காரணம். குடத்திற்கு மண் உபாதான் காரணம். குடமானது மண்ணிலிருந்து உண்டாகிறது என்பதோடு மட்டுமல்லாமல், குடம் இருக்கும் காலம் முழுவதும் மண்ணில்தான் இருக்கிறது. மண்ணைவிட்டுப் பிரித்துத் தனியாகக் குடத்தை எடுத்துச் செல்ல முடியாது. கடைசியில் அழிந்து போவதும் மண்ணில்தான். குடம் போனபிறகு மிஞ்சுவது மண்தான். ஆகையால் குடத்திற்கு மண் உபாதான காரணமாகிறது. கார்யமானது எந்த காரணத்தை விட்டுப் பிரிக்க முடியாமல் எப்பொழுதும் சேர்ந்தேயிருக்கிறதோ, எதிலேயே இருந்து கொண்டு எதிலேயே நாசமடைகிறதோ, அதற்கு உபாதான காரணமென்றுபெயர். குயவன், தண்டம், சக்ரம் முதலியவைகள் குடம் உண்டாவதற்குத் தேவையாயிருந்த போதிலும் குடம் உண்டான பிறகு அத்துடன் ஸம்பந்தமில்லாததால் அவைகள் நிமித்த காரணமாகின்றன. பிரபஞ்சமானது பிரஹ்மத்திலிருந்து உண்டாவதாலும் பிரஹ்மத்திலேயே இருப்பதாலும், கடைசியில் பிரஹ்மத்திலேயே நாசமடைவதாலும் பிரபஞ்சத்திற்கு பிரஹ்மம் [1] உபாதான காரணமாகிறது.

**[2]'आदावन्ते च यन्नास्ति वर्तमानेऽपि तत्तथा ।**

**'ஆதா³வந்தே ச யன்னாஸ்தி வர்தமானே(அ)பி தத்ததா² ।**

என்று மாண்டுக்ய காரிகையில் ஸ்ரீகௌடபாதாசார்யாள் கூறியுள்ள நியாயப்படி முன்னாலும் பின்னாலும் காரணமான பிரஹ்மம்தான் இருக்கிறது. அப்பொழுது பிரபஞ்சமில்லை. நடுவில் மட்டு ம்தான் பிரபஞ்சம் இருக்கிறது போல் தோன்றுகிறது. ஆதலால் அதைப் பொய் என்று தீர்மானிக்கலாம். இந்த சுலோகத்தில்,

[1]. அத்வைத ஸித்தாந்தத்தில் ப்ரஹ்மம் அபின்ன நிமித்தோபாதானம். அதாவது ப்ரஹ்மமே உபாதானமாயும் நிமித்தமாயும் ஆகிறது. அதைத்தவிற வேறு நிமித்த காரணம் கிடையாது.

[2]. மாண்டுக்ய காரிகை - வைதத்யபிரகரணம் சு.6.

---

[1]**"यतो वा इमानि भूतानि जायन्ते ।**
**येन जातानि जीवन्ति ।**
**यत्प्रयन्त्यभिसंविशन्ति .... तद्ब्रह्मेति"**

**"யதோ வா இமானி பூ⁴தானி ஜாயந்தே ।**
**யேன ஜாதானி ஜீவந்தி ।**
**யத்ப்ரயந்த்யபி⁴ஸம்விஶந்தி ... தத்³ப்³ரஹ்மேதி"**

என்று தைத்திரீய உபநிஷத்திலும் [2]**जन्माद्यस्य यतः ஜன்மாத்³யஸ்ய யத:** என்று ப்ரஹ்மஸூத்ரத்திலும் கூறப்பட்ட ப்ரஹ்மத்தின் தடஸ்த லக்ஷணம் கூறப்பட்டது. நீரில் உண்டாகி உடனே மறைந்துபோகும் நீர்க்குமிழிகளை பிரபஞ்சத்திற்கு உபமானமாகக் கூறுவதால் அத்யந்தம் நச்வரமான பிரபஞ்சத்தில் அபிமானம் வைக்கக்கூடாது என்று காட்டுகிறார். **(8)**

---

[1] தைத்திரீயோபநிஷத் பிருகுவல்லி.

[2] ப்ரஹ்மஸூத்ரம் 1-1-2.

---

**(அவதாரிகை)** முன் சுலோகத்தில் பிரபஞ்சமெல்லாவற்றிற்கும் ப்ரஹ்மமொன்றே உபாதான காரணமென்பதை நிரூபணம் செய்தார். அதைக்கொண்டே பிரபஞ்சம் பொய் என்பதை இந்த சுலோகத்தில் காட்டுகிறார்: -

**सच्चिदात्मन्यनुस्यूते नित्ये विष्णौ प्रकल्पिताः ।**
**व्यक्तयो विविधाः सर्वा हाटके कटकादिवत् ॥ ९ ॥**

**ஸச்சிதா³த்மன்யனுஸ்யூதே நித்யே விஷ்ணௌ ப்ரகல்பிதா: ।**
**வ்யக்தயோ விவிதா⁴: ஸர்வா ஹாடகே கடகாதி³வத் ॥ 9 ॥**

ஸச்சித் வடிவமாயும் (எங்கும்) தொடர்ந்திருப்பதும் அழிவற்றதும் (எங்கும்) பரவியிருப்பதுமான ப்ரஹ்மத்தில் பலவித வேற்றுமையுள்ள எல்லாப் பொருள்களும் தங்கத்தில் காப்பு முதலியவைகள் போல கல்பிக்கப்பட்டு இருக்கின்றன.

முன் சுலோகத்தில் ப்ரஹ்மத்திற்கு தடஸ்த லக்ஷணம் கூறப்பட்டது இங்கு **'सच्चिदात्मनि' 'ஸச்சிதா³த்மனி'** என்பதால் தைத்திரீய உபநிஷத்தில் **'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म' 'ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்³ரஹ்ம'** என்று கூறப்பட்ட ஸ்வரூப லக்ஷணத்தைக் காட்டுகிறர். ஸச்சிதானந்தம் தான் பிரஹ்மத்தின் ஸ்வரூபம். அது எல்லா

விடங்களிலும் எல்லாப் பொருள்களிலும் உள்ளும் வெளியும் நிறைந்து இருப்பதால் எல்லாவற்றிற்கும் ஒரே காரண கிறது. அதற்கு அழிவோ உத்பத்தியோ இல்லாததால் அதற்கு வேறெரு காரணம் கிடையாது. அது ஒரு பொழுதும் கார்யமாவதில்லை. தங்கத்தையும் காப்பையும் திருஷ்டாந்தமாகக் கூறி உலகம் பலவித வேறுபாடுகளுள்ள போதிலும் அவைகளெல்லாம் ஒரே பரமாத்மாவிடத்தில் கல்பிதம் என்று கூறுவதால் அவைகளெல்லாம் பொய் என்பதைக் காட்டுகிருர்.

முதலில் கடையில் பவுன் வாங்கி தட்டானிடம் கொடுத்து கைக்குக் காப்பு பண்ணிக்கொள்கிறோம். சில நாள் கழித்து அதையே அழித்து கொலுசாகவும், மற்றோர் சமயம் அதையே வளையாகவும் பண்ணிக்கொள்கிறோம். ஒரே தங்கத்தைக்கொண்டு தான் பல்வேறு நகைகளை தட்டான் செய்கிறுன். இங்கு காப்பு, கொலுசு, வளை முதலியவைகளின் ஸ்வரூபத்தைக் கொஞ்சம் விசாரிப்போம். தங்கம் காரணம், காப்பு முதலியவைகள் காரியம். அதில் தங்கம் என்ற பொருளைவிட வேறுக காப்பு என்ற பொருள் உண்மையிலிருக்கிறதா? முன் தங்கமாக மட்டும் இருந்ததுதான் இப்பொழுது காப்பாகவும் இருக்கிறது. முன்னுல் அதற்கு தங்கம் என்று மட்டும் பெயர். தட்டான் அதற்கு புதிய உருவமொன்றை கொடுத்தான். உடனே அதற்கு தங்கக் காப்பு என்ற பெயர் ஏற்பட்டுவிட்டது. மறுபடியும் இதை அழித்து வளையாகப் பண்ணும்பொழுது முன்னிருந்த உருவமும் பெயரும்போய், வேறு உருவமும் பெயரும் வந்து விடுகிறது. ஆகவே அங்கு இருப்பது முன்னுல் இருந்த தங்கம்தான். நம்மால் கல்பிக்கப்பட்ட நாம ரூபங்கள் (பெயரும் உருவமும்) தான் புதிதாக ஏற்பட்டது. ஆகையால் உண்மைப் பொருள் தங்கம்தான். காப்பு வளை என்பதெல்லாம் தனியான பொருளே அல்ல. அப்படித் தோன்றினுல் அதுபொய்தான். இதுபோலவே காரணமான ப்ரஹ்மமொன்றே உண்மைப் பொருள். ஸச்சிதானந்தமான ப்ரஹ்மத்தைத் தவிற நமக்குத் தோன்றும் பிரபஞ்சம் எல்லாம் அதில் கல்பிக்கப்பட்ட பெயரும் உருவமுமே தவிற உண்மையல்ல. இதை சாந்தோக்ய உபநிஷத்தில்,

**'वाचारम्भणं त्रिकारो नामधेयं लोहमित्येव सत्यं' (अ. ६)**

'வாசாரம்ப⁴ணம் த்ரிகாரோ நாமதே⁴யம் லோஹமித்யேவ ஸத்யம்' (அ। 6)

என்று விரிவாக ஆருணி ச்வேதகேதுவுக்கு உபதேசிக்கிறார்.

இங்கு என்பதால் முன் சுலோகத்தில் கூறப்பட்ட உபாதான காரணம் விவர்த்தோபாதானம் என்பதைக் காண்பிக்கிருர். எந்தக் காரண ஸ்வரூபத்துடன் கார்யமானது ஒன்றாகச் சேர்ந்தது என்றும் சொல்ல முடியாமல், அதைக்காட்டிலும் வேறு என்றும் சொல்ல முடியவில்லையோ, அதற்கு விவர்த்தோபாதான காரணம் என்று பெயர். வெள்ளிக்குக் கிளிஞ்சல் விவர்த்தோபாதானம். அதுமாதிரி ஸத், சித், ஆனந்தம் இவை ப்ரஹ்ம ஸ்வரூபமாயிருப்பதுபோல பிரபஞ்சத்தை ப்ரஹ்ம ஸ்வரூபத்தில் சேர்ந்ததாகக் கூறமுடியாது. ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறுனதாகவும் கூறமுடியாது. ஆகையால் பிரபஞ்சத்திற்கு ப்ரஹ்மம் விவர்த்தோபாதான காரணம் ஆகிறது. **(9)**

**(அவதாரிகை)** முன்கூறிய உதாஹரணங்களில் ஒரு பொருள் மற்றென்றுகத் தோன்றியபோதிலும், ஒரே சமயத்தில் ஒன்று பலவாகத் தோன்றுவதில்லே. தங்கம் காப்பாகத் தோன்றும்பொழுது வளேயாகத் தெரிவதில்லே. ப்ரஹ்மம் ஒரேசமயத்தில் பல பொருள்களாகத் தோன்றுவது எப்படி என்ற கேள்விக்கு ஆகாச திருஷ்டாந்தத் தைக் கொண்டு பதில் கூறுகிறார்: -

**यथाऽऽकाशो हृषीकेशो नानोपाधिगतो विभुः ।**
**तद्भेदाद्भिन्नवद्भाति तन्नाशात् केवलो भवेत् ॥ १० ॥**

**யதா²ऽऽகாஶோ ஹ்ருஷீகேஶோ நாநோபாதி⁴க³தோ விபு⁴: ।**
**தத்³பே⁴தா³த்³பி⁴ன்னவத்³பா⁴தி தந்நாஶாத் கேவலோ ப⁴வேத் ॥ 10 ॥**

ஆகாசம்போல், இந்திரியங்களே அடக்கியாளும், எங்கும் நிறைந்த பரமேச்வரர் பலவாறுக இருக்கும் உபாதிகளேயடைந்து, அந்த உபாதிகள் பலவாக இருப்பதால் இவரும் அநேகர்போல் தோன்றுகிறுர். அந்த உபாதிகள் நாசமாய்விட்டால் முன்போ லவே ஒன்றுகவே தோன்றுகிறுர்.

ஆகாசமென்பது எங்கும் பரவிநிற்கும் பொருள். அது ஒன்றுதான். அதன் ஸ்வரூபத்தில் வேற்றுமை கிடையாது. ஆனுலும் கடாகாசம், மடாகாசம் என்று பலவாகச் சொல்கிறேம் இந்த வேற்றுமைகள் குடம், மடம் முதலான உபாதிகளால் ஏற்படுகிறது. அகண்டமான ஸ்வரூபத்தில் வேற்றுமைகள் ஏற்படுவதற்கு எது காரணமோ, அதற்கு உபாதி என்று பெயர். குடம் ஏற்பட்டவுடன் குடத்திற்குள் இருக்கும் ஆகாசத்திற்குக் குடாகாசம் என்ற பெயர் ஏற்பட்டு அது மற்றதைவிட வேறுகவும் தோன்றுகிறது. இவ்விதம் அந்தந்த உபாதிகள் ஏற்படும்பொழுது அததை யொட்டி ஆகாசமும் பலவாக ஆகிவிட்டதுபோல தோன்றுகிறது. அந்தந்த உபாதிகள் நாசமடைந்ததும் ஆகாசத்தில் உள்ள வேற்றுமையும் மறைந்துவிடுகிறது. உண்மை யில் கடம் முதலான உபாதிகள் உண்டாகி நாசமடைவதைத் தவிர அதனுல் ஆகாச ஸ்வரூபத்தில் முன்னுலோ, பின்னுலோ, மத்தியிலோ ஒருவித மாறுபாடும் ஏற்படுவதில்லே. ஆகாச ஸ்வரூபம் எப்பொழுதும் ஒரேமாதிரியாகத்தான் இருக்கிறது.

இது போலவே ப்ரஹ்ம சைதன்யம் அகண்டமானது. அதன் ஸ்வரூபத்தில் ஒருவித வேற்றுமையும் கிடையாது. ஆனுலும் சரீரமென்னும் உபாதி உலகில் பல கோடிக்கணக்கில் பிரிந்திருப்பதால் அதையொட்டி ஆத்மாவும் பலவாகப் பிரிந்திரு ப்பது போல் தோன்றுகிறது. அந்த உபாதிகளும் பகவன் மாயையால் ஏற்பட்டவை தான். ஆத்மஸாக்ஷாத் காரத்தால் உபாதி நீங்கிவிட்டால் அவர்களுக்கு ஆத்ம ஸ்வரூபம் ஒன்றுகவே தோன்றும். ஆகையால் ஆத்ம ஸ்வரூபத்தில் காணப்படும் வேற்றுமைகள் உண்மையல்ல.

**(அவதாரிகை)** வேற்றுமையைப்போலவே ஆத்மாவில் காணப்படும் மற்ற எல்லா தர்மங்களும் உபாதியால் ஏற்பட்டவை எனக் கூறுகிறுர்: -

**नानोपाधिवशादेव जातिवर्णाश्रमादयः ।**
**आत्मन्यारोपितास्तोये रसवर्णादिभेदवत् ॥ ११ ॥**

**நாஞேபாதி⁴வஶாதே³வ ஜாதிவர்ஞாஶ்ரமாத³ய: ।**
**ஆத்மன்யாரோபிதாஸ்தோயே ரஸவர்ஞாதி³பே⁴த³வத் ॥ 11 ॥**

தண்ணீரில் புளிப்பு கசப்பு முதலான சுவைகளும், சிவப்பு, மஞ்சள் முதலான நிறங்களும் உபாதியின் சேர்க்கையால் தோன்றுவதுபோல் ஆத்மாவிலும் பலவித உபாதிகளின் ஸம்பந்தத்தால் ஜாதி, வர்ணம், ஆச்ரமம் முதலானவை ஆரோபிக்கப் பட்டுத் தோன்றுகின்றன.

ஆத்மாவில் தோன்றும் ஜாதி, வர்ணம், ஆச்ரமம் முதலான பிரிவுகளெல்லாம் உண்மையில் ஆத்மாவைச் சேர்ந்ததல்ல. அவைகளெல்லாம் தேஹத்தைச் சேர்ந்த வை. மனிதன், மிருகம், பக்ஷி, முதலான ஜாதிகள், பிராஹ்மணன், க்ஷத்ரியன் முதலான வர்ணங்கள், பிரஹ்மசாரி, கிருஹஸ்தன் முதலான ஆச்ரமங்கள் இவைக ளெல்லாம் தேஹத்தை ஒட்டி ஏற்பட்டதே தவிற ஆத்மாவுக்குக் கிடையாது. ஆனுலும் தேஹமும் ஆத்மாவும் பிரிக்கமுடியாதபடி அத்யாஸத்தால் ஒன்ருகக் கலந்திருப்பதால் ஜாதி முதலான தேஹதர்மங்கள் ஆத்மாவில் இருப்பதாக ப்ரமத்தால் எண்ணுகிருேம். தண்ணீருக்கு இயற்கையில் ஏற்பட்டது வெளுப்பு நிறமும், மதுர ரஸமும்தான். அதற்கு வாஸனே கிடையாது. ஆனுல் சில இடத்தில் தண்ணீர் சிவப்பாயிருக்கிறது. மற்ருேரிடத்தில் கருப்பாயிருக்கிறது. வேருேரிடத்தில் மஞ்சளாகவுமிருக்கிறது இதுபோல ஜலம் உப்பர்கவும், புளிப்பாகவும், கசப்பாகவும் சில இடங்களில் காணப்படுகிறது. வாஸனேயுள்ள ஜலத்தையும் நாம் பார்க்கிருேம். அறியாதவர்கள் மேற்கூறிய நிறம், சுவை, வாஸனே, இவைகளே ஜலத்தைச் சேர்ந்த வைகளாக நினேப்பார்கள். வஸ்துக்களின் உண்மையை அறிந்தவர்கள் இவை ஜலத்திற்குக் கிடையாதென்றும், ஜலத்துடன் மற்ருெரு பொருள் கலந்திருப்பதால் அப்பொருளிலுள்ள நிறம், சுவை, வாசனேயெல்லாம் ஜலத்தில் தோன்றுகிறதென்றும் கூறுவார்கள். இதே அபிப்பிராயத்தை,

**‘उपलभ्याप्सु चेद्गन्धं केचिद्ब्रूयुरनैषुणाः ।**
**पृथिव्यामेव तं विद्यादपो वायुं च संश्रितम् ॥'**

**‘உபலப்⁴யாப்ஸு சேத்³க³ந்த⁴ம் கேசித்³ப்³ரூயுரனேஷுணு: ।**
**ப்ருதி²வ்யாமேவ தம் வித்³யாத³போ வாயும் ச ஸம்ஶ்ரிதம் ॥'**

(நீரிலும் காற்றிலும் வாஸனேயைப் பார்த்து அறிவில்லாத சிலர் வாஸனே ஜலத் தைச் சேர்ந்ததாகக் கூறுகிருர்கள். அது தவறு. பிருதிவிக்கு மட்டும்தான் வாஸனே உண்டு. பார்த்திவப் பொருள்களுடன் சேர்ந்திருப்பதால் தண்ணீரிலும் காற்றிலும் வாஸனே இருப்பதாகத் தோன்றுகிறது) என்று பெரியோர்கள் கூறியிருக்கிருர்கள். இது போலவே தேஹத்தைவிட வேருக ஆத்மா இருக்கிறது என்றுகூட அறிந்து கொள்ளமுடியாமல், தேஹமே ஆத்மா என்று சொல்லக்கூடிய ரீதியில் தேஹமும் ஆத்மாவும் அத்யாஸத்தால் ஒன்ருகச் சேர்ந்திருப்பதால் தேஹத்தின் தர்மங்கள்

எல்லாம் ஆத்மாவில் இருப்பதாக ப்ரமத்தால் எண்ணி, நான் மனுஷ்யன், பிராஹ்ம ணன், கிருஹஸ்தன் என்றெல்லாம் வியவஹாரம் செய்கிருர்களே தவிற உண்மை யில் இவைகளெல்லாம் ஆத்மாவுக்குக் கிடையாது.

**(அவதாரிகை)** முன் சுலோகத்தில், உபாதியின் ஸம்பந்தத்தால் தான் ஆத்மாவில் ஜாதி, வர்ணம் ஆச்ரமம் முதலியவை தோன்றுவதாகக் கூறப்பட்டது. அந்த உபாதி ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்று மூன்றுவிதம். அவைகளில் முதலாவதான ஸ்தூலோபாதியைப்பற்றிக் கூறுகிருர்: -

**पञ्चीकृत महाभूतसंभवं कर्मसंचितम् ।**
**शरीरं सुखदुःखानां भोगायतनमुच्यते ॥ १२ ॥**

**பஞ்சீக்ருத மஹாபூ⁴தஸம்ப⁴வம் கர்மஸஞ்சிதம் ।**
**ஶரீரம் ஸுக²து³:கா²னாம் போ⁴கா³யதனமுச்யதே ॥ 12 ॥**

பஞ்சீகரணம் செய்யப்பட்ட மஹாபூதங்களிலிருந்து உண்டானதும் (முற்பிறவி களில் செய்த) கர்மாவினுல் ஸம்பாதிக்கப்பட்டதுமான ஸ்தூல சரீரம், (ஆத்மா) ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்கு இருப்பிடம் என்று சொல்லப்படுகிறது.

இந்த ஸ்தூல சரீரத்திற்கு 'பாஞ்சபௌதிகம்' என்று பெயர். அதாவது ஐந்து பூதங்களிலிருந்து உண்டானது. முதலில் ஐந்து பூதங்களும் ஸுமாகத்தான் இருந்தன. ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து ஸூக்ஷ்ம சரீரம் உண்டாயிற்று. பஞ்சீகரணம் செய்த பிறகு இவை ஸ்தூலமாக ஆய்விட்டன. இந்த ஸ்தூல பூதங்களிலிருந்து ஸ்தூல சரீரம் உண்டாயிற்று. பஞ்சீகரணம் என்பது ஒவ்வொரு பூதத்திலும் ஐந்து பூதங்களு டைய அம்சங்களும் கலந்திருப்பது. அதாவது பிருதிவி என்னும் முதல் பூதத்தை முதலில் இரண்டு பாகமாகப் பிரித்து அதில் ஒரு பாதியைத் தனியாக வைத்துக் கொண்டு மற்றேர் பாதியை மறுபடியும் நான்கு பாகங்களாகப் பிரிக்கவேண்டும். இந்த நான்கு அரைக்கால் பாகங்களையும் பிருதிவியைத் தவிற மற்ற நான்கு பூதங்களிலும் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு அரைக்கால் பாகமாக சேர்த்துவிடவேண்டும். இம்மாதி ரியே ஜலம் முதலான மற்ற நான்கு பூதங்களிலும் செய்யவேண்டும். இதற்குத்தான் பஞ்சீகரணமென்று பெயர். இதனுல் ஒவ்வொரு பூதத்திலும் தன் பங்கு பாதியும் மற்ற நான்கு பூதங்களின் நான்கு அரைக்கால் பங்குகளும் சேர்ந்து ஒரு பாதியுமாக ஆகிறது. இவ்விதம் செய்வதால் ஸூக்ஷ்மமாயிருந்த பூதம் ஸ்தூலமாக ஆகி விடுகிறது. உலகில் எப்பொருளையெடுத்தாலும் அதில் ஐந்து பூதங்களின் அம்சமும் இருக்கும். ஆனுலும் எந்த பூதத்தின் அம்சம் அதிகமாக இருக்கிறதோ, அந்த பூதத்தின் பெயரால் வியவஹாரம் செய்கிறேம்.

இவ்வாறு பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஸ்தூல பூதங்களிலிருந்து உண்டான இந்த ஸ்தூல சரீரம் நம்முடன் ஸம்பந்தப்படுவதற்குக் காரணம் நாம் முற்பிறவிக ளில் செய்த புண்யபாபங்களே. ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமி என்னும் மூன்றுவித கர்மாக்களில், பலனைக்கொடுக்க ஆரம்பமாகியிருக்கும் ப்ராரப்த கர்மாவினுல் இந்த சரீரம் நமக்குக் கிடைத்திருக்கிறது. இந்த சரீரம், ஆத்மா ஸுக துக்கங்களை

அனுபவிப்பதற்கு இருப்பிடமாக இருக்கிறது. சரீரத்தில் இருந்துகொண்டுதான் ஆத்மா தனக்குக் கிடைக்கும் விஷயங்களால் ஏற்படும் ஸுகத்தையும் துக்கத்தை யும் அனுபவிக்கிறுன். உண்மையில் ஆத்மா எங்கும் நிறைந்து அகண்டமாக இருந்தாலும் சரீரத்தில்தான் ஸுகதுக்கானுபவம் ஏற்படுகிறது. மற்ற இடத்தில் ஆத்மஸ்வரூபம் இருப்பதாகவே தெரியவில்ஂல. அதனுல் ஆத்மா சிறியவன், சரீரத்தில் தான் இருக்கிறுன் என்றும், சரீரமேதான் ஆத்மா என்றும் நிஂனக்கும் படியாகச் செய்வதால் ஸ்தூல சரீரம் ஆத்மாவுக்கு உபாதியாகிறது. **(12)**

**(அவதாரிகை)** இவ்வாறு ஆத்மாவின் மூன்று உபாதிகளில் முதலாவது உபாதியான ஸ்தூல சரீரத்தைப்பற்றிக் கூறி விட்டு இரண்டாவது உபாதியான ஸூக்ஷ்ம சரீரத்தைப் பற்றிக் கூறுகிறுர்: -

**पञ्चप्राणमनोबुद्धिदशेन्द्रियसमन्वितम् ।**
**अपञ्चीकृत भूतोत्थं सूक्ष्माङ्गं भोगसाधनम् ॥ १३ ॥**

**பஞ்சப்ராணமனேபு³த்³தி⁴த³ஶேந்த்³ரியஸமன்விதம் ।**
**அபஞ்சீக்ருத பூ⁴தோத்த²ம் ஸூக்ஷ்மாங்க³ம் போ⁴க³ஸாத⁴னம் ॥ 13 ॥**

பஞ்சீகரணம் செய்யப்படாத பூதங்களிலிருந்து உண்டான ஐந்து பிராணவாயுக் கள், மனம், புத்தி, பத்து இந்திரியங்கள் இவைகள் அடங்கிய ஸூக்ஷ்மசரீரம், ஆத்மா ஸுகதுக்கங்கஂள அனுபவிப்பதற்குக் கருவியாக ஆகிறது.

பிராணன், அபானன், வியானன், உதானன் ஸமானன் என்னும் ஐந்து பிராண வாயுக்கள், காது, த்வந்திரியம், கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்து ஞானேந்த்ரியங்கள், வாக், கை, கால், பாயு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்கள், மனம், புத்தி ஆக இந்த பதினேழும் சேர்ந்த பகுதிக்கு ஸூக்ஷ்மசரீரம் என்று பெயர். இவைகள் எல்லாம் முன் சுலோகத்தில் கூறப்பட்ட முறையில் பஞ்சீகரணம் செய்யப்படுவத ற்கு முன்பாகவே பூதங்கள் ஸூக்ஷ்மமாக இருக்கும்பொழுதே அவைகளிலிருந்து உண்டானவை. ஸூக்ஷ்ம பூதங்களிலிருந்து உண்டான படியால் இவைகளும் ஸூக்ஷ்மமாகவே இருக்கின்றன. நம் கண்களுக்கு புலப்படக்கூடிய ஸ்தூலமான மூக்கு, நாக்கு, கண் முதலானவைகள் இந்திரியங்கள் தங்குமிடமே. அவைகளே இந்திரியமல்ல. இவைகளுக்கு கோளகமென்று பெயர். அவைகஂளக் காட்டிலும் வேறுக அந்தந்த இடத்தில் சக்தி இருக்கிறது. அவைகள் தான் இந்திரியங்கள். அவை ஸூக்ஷ்மமானவை. சிலருக்கு நாக்கு சரியாயிருந்தும் ருசி தெரிவதில்ஂல. கண் சரியாயிருந்தும் பார்வையில்ஂல. மூக்கு சரியாயிருந்தும் முகரும்சக்தியில்ஂல. இதிலிருந்து இந்திரியம் ஸூக்ஷமமென்று தெரிகிறது. இந்த ஸூக்ஷ்மமான சக்தி இருக்கும் இடத்தையும் அந்தந்த இந்திரியங்களின் பெயரால் உலகில் வியவஹாரம் செய்கிறேம்.

எல்லாவற்றிற்கும் ஆதி காரணமான மாயை ஸத்வம் ரஜஸ், தமஸ் என்னும் முக்குண வடிவமானது. அதிலிருந்து உண்டான பஞ்சபூதங்களிலும் இந்த முக்குணங் களும் உள. அதில் ஆகாசத்திலுள்ள ஸத்வாம்சத்திலிருந்து காதும், வாயுவின்

ஸத்வாம்சத்திலிருந்து தவகிந்திரியமும், தேஜஸ்ஸின் ஸத்வாம்சத்திலிருந்து கண்ணும், ஜலத்தின் ஸத்வாம் சத்திலிருந்து நாக்கும், பிருதிவியின் ஸத்வாம்சத்திலிருந்து மூக்கும் உண்டாயின. ஐந்து பூதங்களின் ஸத்வாம்சங்களும் சேர்ந்து அந்தக்கரணம் உண்டாயிற்று. ஒரே அந்தக்கரணம் ஸந்தேஹ நிலைமையில் மனமென்றும், நிச்சய நிலைமையில் புத்தியென்றும் பெயரை அடைகிறது. ஐந்து பூதங்களின் ரஜோகுணாம்சங்களிலிருந்து தனித்தனியாக முறையே வாக், கை, கால், பாயு உபஸ்தம் என்ற ஐந்து கர்மேந்திரியங்களும், ஐந்து பூதங்களின் ராஜ ஸாம்சங்களும் சேர்ந்து பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்னும் ஐந்து வாயுக்களும் உண்டாயின.

பிராணன் என்பது ஒன்றுயிருந்தாலும் அந்தந்த இடத்தை யொட்டி வெவ்வேறு பெயரை அடைகிறது. பிராணனுக்கு ஹிருதயமும், அபானனுக்கு குதமும், ஸமானனுக்கு தொப்புளும், உதானனுக்கு கண்டமும், வியானனுக்கு சரீரம் முழுமையும் இடங்களாம். வெளியில் மூச்சை விடும்படி செய்பவன் பிராணன். அபானன் உள்ளே மூச்சை இழுக்கிறுன். நாம் வாயில் போடும் உணவை இழுப்பவனும் அபானன் தான். அந்த உணவை சரீரத்திலுள்ள எல்லா இடங்களுக்கும் செலுத்துபவன் ஸமானன். இந்திரியங்களுக்கெல்லாம் பலத்தைக் கொடுப்பவன் வியானன். உதானன் ஸ்வப்ன காலத்தில் இந்திரியங்களை ஒடுங்கச்செய்வது, ஜாக்ரத் காலத்தில் அவைகளைக் கிளப்புவது முதலான காரியங்களைச் செய்கிறுன். இந்த சரீரத்திலிருந்து வெளியில் புறப்பட உதவிசெய்பவனும் இவனே. இந்த சரீரத்தில் வஸிக்கும் ஆத்மா இந்த 17 கருவிகளைக் கொண்டுதான் ஸுக துக்கங்களை அனுபவிக்கிறுன்.

**(அவதாரிகை)** இவ்வாறு இரண்டாவது உபாதியான ஸூக்ஷ்ம சரீரத்தைப் பற்றிக் கூறிவிட்டு மூன்றுவது உபாதியான காரண சரீரத்தைப்பற்றிக் கூறுகிறுர்: -

**अनाद्यविद्याऽनिर्वाच्या कारणोपाधिरुच्यते ।**
**उपाधित्रितयादन्यमात्मानमवधारयेत् ॥ १४ ॥**

**அநாத்³யவித்³யா(அ)நிர்வாச்யா காரணோபாதி⁴ருச்யதே ।**
**உபாதி⁴த்ரிதயாத³ன்யமாத்மானமவதா⁴ரயேத் ॥ 14 ॥**

ஆதியில்லாததும் இன்னவிதமென்று சொல்ல முடியாததுமான அவித்யை தான் காரணோபாதி என்று சொல்லப்படுகிறது. ஆத்ம ஸ்வரூபத்தை இம் மூன்று உபாதிகளைக் காட்டிலும் வேறுக நிச்சயித்துக்கொள்ள வேண்டும்.

இந்த அவித்யையானது ஸ்தூலம், ஸூக்ஷ்மம், முதலான எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பதாலும், ஜீவன் ஸம்ஸார நிலையை அடைவதற்கும் அதுவே முக்ய காரணமாக இருப்பதாலும் அவித்யையை காரண சரீரம் என்றும் காரண உபாதி யென்றும் கூறுகிறுர்கள். நமக்கு எப்பொழுது இந்த அக்ஞானம் ஏற்பட்டது? என்று இந்த ஸம்ஸாரநிலையில் புகுந்தோம்? என்பதை ஒருவரும் கூறமுடியாது. அதனுல் இது அநாதி (பிறப்பில்லாதது). ஆனுலும் அவித்யைக்கு ஞானத்தால் முடிவுமட்டும் உண்டு. அஞ்ஞானம் அனுதியாயிருந்தாலும் வெளிச்சத்தைக் கண்டு இருள் விலகு

வது போல விரோதியான ஞானம் வந்ததும் இருந்த இடம் தெரியாமல் அக்ஞானம் அழிந்துபோகிறது. இதன் ஸ்வரூபத்தை ஒருவிதத்திலும் விவரித்துக் கூற முடியாது. முடிவில் ஞானத்தால் அழிந்துபோவதால் அவித்யையை 'ஸத்' என்று கூற முடியாது. எல்லோருக்கும் ஸ்பஷ்டமாக அக்ஞானம் புலப்படுவதால் அது முயல் கொம்புபோல் அஸத்துமல்ல. அவித்யைக்குத்தான் ஸமஷ்டியில் மாயை என்று பெயர். மிக ஸூக்ஷ்மமான ஆகாசத்திற்கும் காரணமான மாயையில் அவ்யவம் இருப்பதாகச் சொல்ல முடியாது. இவ்வளவு பெரிய ஜகத்தாக பரிணமத்தையடை யும் மாயையில் அவயவமில்லையென்றும் கூறமுடியாது. நெருப்பில் அதன் சக்தி யிருப்பதுபோல் ஆத்மாவில் மாயை இருப்பதால் இதை ஆத்மாவைக் காட்டிலும் வேறுகக் கூறமுடியாது. சேதனமான ஸ்வயம் பிரகாசமான ஆத்ம ஸ்வரூபத்தில் சேர்ந்ததாகவும் கூற முடியாது. இவ்வாறு ஒருவிதத்திலும் அதைப்பற்றிச் சொல்ல முடியாததால் அது அநிர்வாசயம் : பொய். அதன் கார்யமான பிரபஞ்சமும் பொய். ஜாலவித்தைக்காரன் மாங்கொட்டையைக் காண்பித்து உடனே அங்கேயே அதிலிரு ந்து தோன்றிய மாமரத்தையும் மாம்பழத்தையும் காட்டுகிறுன். நன்றுகத்தெரிகிறது. அதன் தத்வத்தைப் பற்றி ஏதாவது கூறமுடியுமா? இதுபோல்தான் பிரபஞ்சமும்.

இவ்வாறு மூன்றுவித உபாதிகளையும் கூறிவிட்டு ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றிக் கூறவந்த இந்நூலில், இந்த மூன்று வித உபாதிகளை வர்ணிப்பதன் பிரயோஜ னத்தை சுலோகத்தின் பின்பாதியால் சொல்கிறுர். ஆத்மஸ்வரூபமானது நாம் எல்லோரும் ஸ்பஷ்டமாகப் புரிந்துகொள்ளும் ரீதியில் தனித்து இருக்கவில்லை. கீழே கூறப்பட்ட மூன்று உபாதிகளுடன் சேர்ந்து அவைகளால் ஆத்மஸ்வரூபம் மறைக்கப் பட்டிருக்கிறது. ஆதலால் உபாதிகளை விலக்கி அவைகளிலிருந்து பிரித்துப்பார்த் தால் தான் ஆத்மஸ்வரூபம் விளங்கும். உபாதிகளிலிருந்து ஆத்ம ஸ்வரூபத்தைப் பிரித்துப்பார்க்கவேண்டுமானுல் உபாதிகள் என்பவை யாவை? அவைகளின் ஸ்வரூ பம் என்ன என்பதை முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். அதற்காகத்தான் இங்கு உபாதிகளைப்பற்றிக் கூறுகிறார்.

(**அவதாரிகை**) இவ்வாறு மூன்று உபாதிகளையும், அவைகளி லிருந்து ஆத்மா வேறுபட்டவன் என்பதையும் கூறிவிட்டு ஐந்து கோசங்களைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டவன் என்பதைக் கூறுகிறார் : -

**पञ्चकोशादियोगेन तत्तन्मय इव स्थितः ।**
**शुद्धात्मा नीलवस्त्रादियोगेन स्फटिको यथा ॥ १५ ॥**

**பஞ்சகோஶாதி³யோகே³ன தத்தன்மய இவ ஸ்தி²த: ।**
**ஶுத்³தா⁴த்மா நீலவஸ்த்ராதி³யோகே³ன ஸ்ப²டிகோ யதா² ॥ 15 ॥**

கருப்பு வஸ்திரம் முதலியவைகளின் ஸம்பந்தத்தால் வெளுப்பான ஸ்படிக மானது அந்தந்த நிறமுள்ளதாகத் தோன்றுவதுபோல், பரிசுத்தமான ஆத்மஸ்வரூபம், ஐந்து கோசங்கள் முதலியவைகளின் ஸம்பந்தத்தால் அந்தந்த ஸ்வரூபம்போலவே தோன்றிக்கொண்டிருக்கிறது.

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்து கோசங்களும் ஆத்ம ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டிருக்கின்றன. கத்தியின் உறையானது தன்னுள் கத்தியை வைத்துக்கொண்டு மறைத்துக் கொண்டிருப்பதால் அதற்குக் கோசம் என்று பெயர். அதுபோலவே அன்னமயம் முதலான ஐந்தும் ஆத்மஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டிருப்பதால் இவைகளுக்கும் கோசம் என்று பெயர். இவ்வைந்தும் முன் கூறப்பட்ட ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்னும் மூன்று உபாதிகளைக் காட்டிலும் வேறல்ல. மூன்றாகப் பிரித்துக் காட்டப்பட்ட அவைகளையே இப்பொழுது ஐந்தாகப் பிரித்துக்காட்டுகிறார். முன்கூறிய மூன்று உபாதிகளில் முதலாவதான ஸ்தூலசரீரத்திற்கு அன்னமயகோசம் என்று பெயர். நாம் சாப்பிடும் அன்னத்தின் ஸாரமான சுக்லத்திலிருந்து உண்டாயிருப்பதாலும், அந்த அன்னத்தினாலேயே வளர்ச்சியடைவதாலும் இதற்கு அன்னமயமென்று பெயர். முன்கூறிய ஸூக்ஷ்ம சரீரத்தில் ஐந்து கர்மேந்திரியங்களும் பிராணாதிகள் ஐந்தும் சேர்ந்தது பிராணமயகோசம். ஐந்து ஞானேந்திரியங்களும் மனதும் சேர்ந்தது மனோமயகோசம். ஐந்து ஞானேந்திரியங்களும் புத்தியும் சேர்ந்தது விஞ்ஞானமய கோசம். முதலில் விஷயங்களை மனதால் ஆலோசனை செய்கிறோம். பிறகு புத்தியால் தீர்மானித்து கார்யங்களைச் செய்கிறோம். ஆகையால் விஞ்ஞானமயன் கர்த்தாவாகிறான். அடுத்தது ஆனந்தமயன். அது போக்தா.

இவ்வைந்து கோசங்களும் ஒன்றுக்கொன்று உள்ளே இருக்கின்றன. ஒரு கத்தியை உள்ளே வைத்து அதற்கு மேல் மேல் ஐந்து உறைகள் இருப்பதுபோல, இவ்வைந்து கோசங்களும் ஆத்மஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டிருப்பது மட்டுமல்லாமல் ஒவ்வொன்றும் தானே ஆத்மா என்றும் காட்டுகின்றன. மிக்க ஒளி பொருந்திய இரும்புத் தகடுகளால் ஒன்றைக்காட்டிலும் ஒன்று பெரியதாக ஐந்து உறைகள் செய்து உள்ளே கத்தியை வைத்து ஒன்றின்மேல் ஒன்றாக ஐந்து உறைகளையும் போட்டால் மேலுள்ள உறையைப் பார்த்து அதையே கத்தி என்று ப்ரமத்தால் எண்ணுகிறான். அதைக் கழட்டி எடுத்துவிட்டால் இரண்டாவது உறையை கத்தியென நினைக்கிறான் ஐந்து உறைகளையும் எடுத்துவிட்டால் உண்மையான கத்தியைப் பார்க்கிறான். அதுபோல ஐந்து கோசங்களையும் ஒதுக்கித் தள்ளினால்தான் ஆத்மஸ்வரூபத்தை அறியமுடியும்.

இவ்வைந்து கோசங்களும் ஆத்மஸ்வரூபமும் கயிறும் பாம்பும்போல அத்யாஸத்தால் ஒன்றாகக் கலந்திருக்கிறது. கோசத்தின் தர்மங்கள் ஆத்மாவிலும் ஆத்மதர்மம் கோசத்திலும் தோன்றுகிறது. அதனால் ஆத்மஸ்வரூபம் அந்தந்த கோசமாகவே நமக்குத் தோன்கிறுது. ஸ்படிகம் வெளுப்பாக இருந்தாலும் அதன் அருகில் கருப்புத் துணியை வைத்தால் ஸ்படிகமும் கருப்பாகத் தோன்றுகிறது. சிகப்பு நிறமுள்ள பொருள் இருந்தால் சிகப்பாகத் தோன்றுகிறது. அந்தப் பொருள்களை அவ்விடத்திலிருந்து நீக்கிவிட்டால் ஸ்படிகத்தில் இயற்கையாயுள்ள வெளுப்பு நிறம்தான் தோன்றும். இதுபோல ஆத்மா சுத்தமாயிருந்தாலும் கோசங்களின் ஸம்பந்தத்தால் அந்தந்த கோச ஸ்வரூபமாகத் தோன்றுகிறான். உண்மையில் ஆத்மஸ்வரூபம் சுத்தமானது. ஆத்மஸ்வரூபம் ஸூக்ஷ்மமாக இருப்பதால் அதைக் காட்டுவதற்காகத்தான் கோசங்களையே ஆத்மா என்று தைத்திரீயோபநிஷத்

கூறுகிறது. வெளிப்பார்வையைத் திருப்புவதற்காக முதலில் அன்னமய கோசத்தை ஆத்மா என்று கூறி, பிறகு இவன் ஆத்மா அல்ல், இதற்குள்ளிருக்கும் பிராணமயம் தான் ஆத்மா என்று உபதேசிக்கிறது. இப்படியே ஒவ்வொரு கோசத்தையும் ஆத்மா அல்ல என்று கூறி கடைசியாக எல்லாவற்றிற்கும் ஆந்தரமான சுத்தமான ஆத்மஸ்வரூபத்தை உபதேசிக்கிறது. **(15)**

**(அவதாரிகை)** இவ்வாறு ஐந்து கோசங்களுடன் ஆத்ம ஸ்வரூபம் சேர்ந்திருப்பதைக் கூறிவிட்டு அஸங்கமாயும் பரிசுத்தமாயுமுள்ள ஆத்மஸ்வரூபத்தைத் தனியாக அறிந்து கொள்ளவேண்டிய வழியைக் கூறுகிறார்: -

**वपुस्तुषादिभिः कोशैर्युक्तं युक्त्यावघाततः ।**
**आत्मानमान्तरं शुद्धं विविच्यात्तण्डुलं यथा ॥ १६ ॥**

**வபுஸ்துஷாதி³பி⁴: கோஶைர்யுக்தம் யுக்த்யாவகா⁴தத: ।**
**ஆத்மானமாந்தரம் ஶுத்³த⁴ம் விவிச்யாத்தண்டு³லம் யதா² ॥ 16 ॥**

உமி முதலியவைகளுடன் சேர்ந்திருக்கும் அரிசியை உலக்கையால் குத்தி அவைகளிலிருந்து பிரித்து எடுப்பது போல் ஐந்து கோசங்களுடன் சேர்ந்திருக்கும் ஆத்ம வஸ்துவை தகுந்த யுக்திகளால் அவைகளிலிருந்து பிரித்து, எல்லாவற்றிற்கும் ஆந்தரமாயும் பரிசுத்தமாயுமுள்ள ஸ்வரூபத்தை தெரிந்துகொள்ளவேண்டும்.

லோகத்தில் எல்லோரும் வியவஹாரம் செய்யும் பொழுது முற்கூறிய ஐந்து கோசங்களையும் ஆத்மாவையும் சேர்த்துத்தான் **நான்** என்று சொல்லுகிறுர்கள். ஒன்றும் அறியாத பாமரர்கள் ஐந்து கோசங்களையேதான் **நான்** என்று சொல்கிறுர்கள். இதைத் தவிற வேருக ஆத்மா ஒன்று இருக்கிறது என்பதே இவர்களுக்குத் தெரியாது. சாஸ்திரங்களைப்படித்தவர்களுக்கு ஐந்து கோசங்களைக் காட்டிலும் வேருக ஆத்மா இருக்கிறது என்பது தெரியும். அதுதான் தன் ஸ்வரூபம் என்பதும் தெரியும். ஆனுலும் லோகவியவஹாரத்தில் ஈடுபடும்பொழுது எல்லாவற்றையும் மறந்து கோசங்களையே நான் என எண்ணுகின்றனர். இவ்வாறு கோசங்களையும் ஆத்மாவையும் சேர்த்தே **நான்** என தன் ஸ்வரூபமாக எண்ணுவதுதான் கோசங்களும் ஆத்மாவும் சேர்ந்திருப்பது என்பது. இது அத்யாஸத்தால் ஏற்பட்டது. உமியுடன் சேர்ந்திருக்கும் அரிசியை (நெல்லை) உலக்கையால் குத்தி உமி வேறு அரிசி வேருகப் பிரித்து உமியை நீக்கி சுத்தமான அரிசியை எடுத்துக்கொள்கிறோம். அதுபோல் குருமுகமாக உபநிஷத்துக்களின் மூலம் ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்டு பிறகு யுக்தியால் விசாரம் செய்யவேண்டும். ஆத்மாவின் லக்ஷணம் இவைகளில் இல்லாததால் இவைகள் ஆத்மா அல்ல என்று ஒவ்வொன்ருக நீக்கி கடைசியாக இவைகளையெல்லாம் அறிந்து கொள்ளும் ஞானஸ்வரூபமான ஆத்மாவைத் தெரிந்து கொள்ளவேண்டும். யுக்திகளும் முறைகளும் **விவேகசூடாமணி**, **பஞ்சதசி** முதலான நூல்களில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. **(16)**

**(அவதாரிகை)** முன்சுலோகத்தில் ஐந்து கோசங்களும் ஆத்மா போல் தோன்றினுலும், அவை ஆத்மாவல்ல. அவைகளைக் காட்டிலும் வேருனது என்று கூறப்பட்

டது. அப்படியே ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணமென்னும் மூன்று சரீரங்களைக் காட்டிலும் வேறானது என்பதும் முன்னால் கூறப்பட்டது. இவைகளைக்காட்டிலும் வேறான ஆத்மா எங்கே இருக்கிறது? எந்த இடத்தில் ஆத்மாவைத் தெரிந்து கொள்ளலாம்? என்பதைக் கூறுகிறார்: -

## सदा सर्वगतोऽध्यात्मा न सर्वत्रावभासते ।
## बुद्धावेवावभासेत स्वच्छेषु प्रतिविम्बवत् ॥ १७ ॥

**ஸதா³ ஸர்வக³தோ(அ)த்⁴யாத்மா ந ஸர்வத்ராவபா⁴ஸதே ।**
**பு³த்³தா⁴வேவாவபா⁴ஸேத ஸ்வச்சே²ஷு ப்ரதிவிம்ப³வத் ॥ 17 ॥**

ஆத்மா எப்பொழுதும் எங்கும் இருந்தபோதிலும் எல்லா இடத்திலும் விளங்குவதில்லை. நிர்மலமான வஸ்துக்களில் பிரதிபிம்பம் ஏற்படுவது போல புத்தி யில்தான் பிரகாசிக்கும்.

ஆத்மா எங்கும் நிறைந்துள்ள வஸ்து. அது இல்லாத இடம் கிடையாது. அதைப் பார்க்க வேறிடம் தேடிச் செல்லவேண்டிய அவசியமில்லை. எங்கு தேடிச் சென்றாலும் ஆத்மாவைப் பார்க்கவும் முடியாது. கண் காது முதலான இந்திரியங் களை வெளியே போகவிட்டுக்கொண்டு அது போன போக்கிலேயே நாமும் போய்க் கொண்டிருந்தால் ஒருநாளும் ஆத்மாவைப் பார்க்கமுடியாது. ஆத்மாவைப் பார்க்க வேண்டுமானால் இந்திரியங்களின் வெளிப்போக்கை முதலில் அடக்கவேண்டும். அப்பொழுது புத்தியில் ஆத்மா விளங்கும். புத்தி ஒன்றுதான் ஆத்மாவை தெரியப் படுத்தும் ஸாதனம். அந்த புத்தியிலும் ஆசை, கோபம் முதலான அழுக்குகள் ஏறியிருந்தால் ஆத்மா தெரியாது. வெளிப் புலன்களின் ஓட்டத்தையடக்குவதுடன் காமக்ரோதாதிகளில்லாமல் மனதை சுத்தமாக வைத்துக்கொண்டால் ஆத்மா நன்கு பிரகாசிக்கும். நம் முகத்தை நாம் பார்க்க வேண்டுமானால் கண்ணாடியின் எதிரில் போய் நிற்கிறோம். கண்ணாடி நம் முகத்தை நமக்கு நன்கு காட்டுகிறது. கண்ணாடி, சுவர் எல்லாம் பிருதிவி என்ற பூதத்தைச் சேர்ந்ததானாலும் ஸ்வச்சமான கண்ணாடியில்தான் முகம் தெரிகிறது, சுவற்றில் தெரிவதில்லை. கண்ணாடியும் அழுக்கடைந்திருந்தால் அங்கு முகம் நன்கு தெரிவதில்லை. அழுக்கைத் துடைத்து சுத்தமாய் வைத்திருந்தால்தான் நன்கு பார்க்க முடிகிறது. அதுபோல ராகாதி தோஷங்கள் எல்லாம் நீங்கின சுத்தமான மனதில் ஆத்மஸ்வரூபத்தை அறிந்து கொள்ளலாம். **(17)**

**(அவதாரிகை)** ஆத்மா தேஹத்திலிருந்தாலும் அத்துடன் ஒட்டாமல் தனியாகவே இருக்கிறார் என்பதை திருஷ்டாந்தத்தால் விளக்குகிறார்: -

## देहेन्द्रियमनोबुद्धिप्रभृतिभ्यो विलक्षणम् ॥
## तद्वृत्तिसाक्षिणं विद्यादात्मानं राजवत्सदा ॥ १८ ॥

**தே³ஹேந்த்³ரியமனோபு³த்³தி⁴ப்ரப்⁴ருதிப்⁴யோ விலக்ஷணம் ॥**
**தத்³வ்ருத்திஸாக்ஷிணம் வித்³யாதா³த்மானம் ராஜவத்ஸதா³ ॥ 18 ॥**

ஆத்மாவை, தேஹம், இந்திரியம், மனம், புத்தி முதலியவைகளைக்காட்டிலும் வேறுபட்டவனாகவும், அரசன் போல அவைகளின் கார்யங்களை நேரில் பார்க்கிறவனாகவும் தெரிந்துகொள்ளவேண்டும்.

நம் சரீரத்தில் இந்திரியங்கள், மனம், புத்தி, பிராணன் முதலான அநேக வஸ்துக்கள் இருக்கின்றன. இங்குதான் ஆத்மாவும் இருக்கிறது. ஆனாலும் அவைக ளுடன் ஸம்பந்தப்படாமல் ஆத்மா தனியாகவேயிருக்கிறது. தேஹம், இந்திரியம் முதலானவைகளின் ஸ்வரூபத்தையும் ஆத்மாவின் ஸ்வரூபத்தையும் நன்கு ஆராய்ந்து பார்த்தோமானால் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லை. மிகுந்த வேற்றுமை இருக்கிறது. தேஹாதிகள் ஜடம், எப்பொழுதும் மாறக் கூடியது, அறியப்படுவது; ஆத்மா ஞானரூபி, எப்பொழுதும் ஒரேமாதிரி இருப்பது, அறியப்படுவதில்லை, சுத்த மானது, அஸங்கம். இவ்வித வேற்றுமையுள்ள ஆத்மா தேஹாதிகளுடன் ஸம்பந்தப் படுவதில்லை. ஆனாலும் அவைகள் செய்யும் ஒவ்வொரு கார்யத்தையும் ஸாக்ஷியாக நின்று பார்த்துக்கொண்டிருக்கிறான். பெரிய ராஜாங்கத்தில் மந்திரி முதலான ஸகலரும் தங்கள் தங்கள் வேலைகளைச் செய்கிறார்கள். புத்திமானான அரசன், தான் ஒரு வேலையையும் செய்யாமலலேயே, அவர்கள் செய்யும் காரியங்கள் எல்லாவற் றையும் கவனித்து வருகிறான். அதுபோலவே, ஆத்மாவும் தான் ஒரு வேலையையும் செய்யாமலலேயே அவைகள் செய்யும் கார்யங்கள் எல்லாவற்றையும் கவனித்து வருகிறான். இங்கு ஆத்மாவை ஸாக்ஷி என்று கூறுவதாலேயே ஒரு காரியமும் செய்வதில்லை என்பது கிடைக்கிறது. தான் காரியம் செய்யாமல் எல்லாவற்றையும் நேரில் பார்க்கிறவனுக்குத்தான் ஸாக்ஷி என்று பெயர்.

**अकर्तृत्वे सति बोद्धृत्वं साक्षित्वम् ॥**

**அகர்த்ருத்வே ஸதி போ³த்³த்⁴ருத்வம் ஸாக்ஷித்வம் ॥**

**(18)**

**(அவதாரிகை)** இந்த சரீரத்தில் நடக்கும் காரியங்களெல்லாவற்றையும் ஆத்மா செய்வதாகத்தானே உலகில் எல்லோரும் சொல்கிறார்கள். அவ்விதமிருக்க ஆத்மாவை 'அகர்த்தா' என்றும், 'ஸாக்ஷி' என்றும், 'விகாரமற்றவன்' என்றும் எப்படிச் சொல்லமுடியும் என்பதற்கு விடை கூறுகிறார்: -

**व्यापृतेष्विन्द्रियेष्वात्मा व्यापारीवाविवेकिनाम् ।**
**दृश्यतेऽषु धावत्सु धावन्निव यथा शशी ॥ १ ९ ॥**

**வ்யாப்ருதேஷ்விந்த்³ரியேஷ்வாத்மா வ்யாபாரீவாவிவேகினாம் ।**
**த்³ருஶ்யதே(அ)ஷு தா⁴வத்ஸு தா⁴வன்னிவ யதா² ஶஶீ ॥ 19 ॥**

மேகங்கள் ஓடும்பொழுது சந்திரன் ஓடுவதுபோல எப்படிக் காணப்படுகிறதோ (அப்படியே) இந்திரியங்கள் வேலை செய்யும்பொழுது ஆத்மா வேலை செய்வதுபோல் விவேகமில்லாதவர்களுக்குத் தோன்றுகிறது.

நம் சரீரத்தில், இந்திரியம், மனம் முதலியவைகள் தான் எப்பொழுதும் வேலை செய்துகொண்டிருக்கின்றன. கண் ரூபத்தை நோக்கி ஓடுகிறது. காது சப்தத்தை நோக்கிச் செல்கிறது. இவ்வாறு அந்தந்த இந்திரியங்கள் தம் தம் விஷயங்களை நோக்கிச் செல்கின்றன. மனமும் அந்த இந்திரியங்களின் வழியாக வெளியே செல்கிறது. வெளியே செல்லமுடியாவிட்டால் உள்ளே இருந்துகொண்டே மனோ ராஜ்யம் நடத்துகிறது. இவ்வாறு இந்திரியங்கள், மனம் முதலானவைகள் தான் எல்லாக் காரியங்களையும் செய்கின்றன. உண்மையில் ஆத்மா ஒரு காரியமும் செய்வதில்லை. ஆனாலும் இந்திரியாதிகளின் ஸ்வரூபத்தையும் ஆத்மாவின் ஸ்வரூபத்தையும் பிரித்து ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொள்ளாத அவிவேகிகள் இந்திரியங்கள் செய்யும் காரியத்தையே ஆத்மா செய்வதாகக் கூறுகிறார்கள். அது தவறு. குருவின் உபதேசத்தாலும், சாஸ்திரங்கள் மூலமாகவும் ஆத்மாவையும், அனாத்மாவையும் பிரித்து நன்கு தெரிந்துகொண்டவர்கள் இவ்வாறு நினைக்கமாட்டார் கள். இரவில் மேக ஸஞ்சாரம் லேசாக இருக்கும்பொழுது ஆகாயத்தில் பார்த்தால் சந்திரன் போவதுபோல் தோன்றும். அதைப்பார்த்து சிறுவர்கள் சந்திரன் போவதாகச் சொல்வார்கள். விஷயமறிந்தவர்கள் சந்திரன் ஒரே இடத்தில்தான் இருப்பதாகவும், அவன் போகவில்லை என்றும் மேகம்தான் போவதாகவும், நம் கண்ணுக்கு சந்திரன் போவதாகத் தோன்றுவது ப்ரமம் என்றும் கூறுவார்கள். இதுபோலவே விவேகிகள் ஆத்மா ஒரு வியாபாரமும் செய்யவில்லை என்றும், இந்திரியாதிகள் செய்யும் வியாபாரம் ஆத்மா செய்வதுபோல தோன்றுவதாகவும் அது ப்ரமம் என்றும் நினைப்பார்கள். **(19)**

**(அவதாரிகை)** தேஹம், இந்திரியம், மனஸ், புத்தி இவைகளாலேயே எல்லாக் காரியங்களும் நடைபெறுகிறபடியால் ஞானத்தை உண்டுபண்ணும் இவைகளையே சேதனம் என்று சொல்லிவிடலாமே. இவைகளைக் காட்டிலும் வேறாக, ஸாக்ஷியாக ஆத்மசைதன்யம் என்பது எதற்கு? என்ற கேள்விக்கு ஸமாதானம் கூறுகிறார்: -

**आत्मचैतन्यमाश्रित्य देहेन्द्रियमनोधियः ।**
**स्वकीयार्थेषु वर्तन्ते सूर्यालोकं यथा जनाः ॥ २० ॥**

**ஆத்மசைதன்யமாஶ்ரித்ய தே³ஹேந்த்³ரியமனோதி⁴ய: ।**
**ஸ்வகீயார்தே²ஷு வர்தந்தே ஸூர்யாலோகம் யதா² ஜனா: ॥ 20 ॥**

ஸூர்யனுடைய வெளிச்சத்தைக்கொண்டு ஜனங்கள் தங்கள் தங்கள் காரியங் களை நடத்துவதுபோல ஆத்ம சைதன்யத்தைக்கொண்டுதான் தேஹம், இந்திரியம், மனம், புத்தி இவைகள் தன் தன் விஷயங்களில் செல்கின்றன.

உலகில் ஒவ்வொருவரும் ஸூரிய வெளிச்சத்தின் உதவியைக்கொண்டு தங்கள் தங்கள் கார்யங்களைச் செய்கிறார்கள். ஸூரிய வெளிச்சம் என்பதை. பொதுவாக பிரகாசம் என்பதாகக் கொள்ளவேண்டும். வெளிச்சம் இல்லாமல் இருட்டாயிருந்தால் கண்ணால் ஒரு பொருளையும் பார்க்கமுடியாது. அதுபோல இந்திரியம், மனம், புத்தி இவைகளும் ஆத்ம சைதன்ய ஸம்பந்தத்தால்தான் விஷயத்தின் அறிவை உண்டு பண்ணுகின்றன. இவைகளெல்லாம் ஜடப்பொருளா

கையால் தானுக பிரகாசிக்கவோ பிரகாசப் டுத்தவோ ஸாமர்த்தியம் கிடையாது. இவைகள் ஜடமாக இல்லாமல் சேதனமாக இருக்குமானுல் எப்பொழுதும் இவைகளால் நமக்கு ஞானம் ஏற்படவேண்டும். இந்திரியங்களாலோ, மனதாலோ நமக்கு எப்பொழுதும் ஞானம் ஏற்படுவதில்லை. சிலஸமயங்களில்தான் ஞானம் ஏற்படுகிறது. தூக்கத்தில் இந்த இந்திரியங்களால் ஞானம் ஏற்படுகிறதில்லை. ஆகவே ஆத்மாதான் சேதனம். அது எப்பொழுதும் பிரகாசிக்கிற வஸ்து. ஆத்ம சைதன்ய ஸம்பந்தத்தால் சில ஸமயங்களில் மட்டும் பிரகாசிக்கிற இந்திரியாதிகள் ஜடப்பொருள்கள். இங்கு ஸூர்யபிரகாசத்தை திருஷ்டாந்தமாகக் கூறியதால் மற்றுேர் அபிப்பிராயமும் த்வனிக்கிறது. ஸூர்யோதயமானவுடன் எல்லாரும் எழுந்திருந்து தங்கள் தங்கள் கார்யங்களைச்செய்ய ஆரம்பிக்கின்றனர். சிலர் நல்ல காரியம் செய்கின்றனர். சிலர் கெட்ட காரியம் செய்கின்றனர். எல்லோரையும் தூண்டிய போதிலும் இவர்கள் செய்யும் நல்ல கார்யங்கள், கெட்ட கார்யங்களின் பயன் ஸூர்யனையடைவதில்லை. அதுபோல் ஆத்ம சைதன்ய ஸம்பந்தத்தால் மனம் முதலானவை தன் தன் காரியத்தைச் செய்தபோதிலும் ஆத்மா ஒன்றிலும் ஸம்பந்தப்படாமல் ஸாக்ஷியாக அஸங்கமாக விளங்குகிறுர்.

**(அவதாரிகை)** உலகில் எல்லோரும் "நான் பிறந்தேன், வளர்ந்தேன்; நான் சிறுவன், பெரியவன்; நான் பார்க்கிறேன் கேட்கிறேன்" என்று பிறப்பு, வளர்ச்சி, பால்யம் முதலானவைகளை ஆத்மாவைச் சேர்ந்ததாகத்தானே எண்ணுகின்றனர். அப்படியிருக்க ஆத்மாவை ஒருவித விகாரமுமற்றவனுக எப்படிக் கூறமுடியும் எனில் அதற்கு பதில் கூறுகிறார்: -

**देहेन्द्रियगुणान् कर्माण्यमले सच्चिदात्मनि ।**
**अध्यस्यन्त्यविवेकेन गगने नीलतादिवत् ॥ २१ ॥**

**தே³ஹேந்த்³ரியகு³ணுன் கர்மாண்யமலே ஸச்சிதா³த்மனி ।**
**அத்⁴யஸ்யந்த்யவிவேகேன க³க³னே நீலதாதி³வத் ॥ 21 ॥**

பகுத்தறிவில்லாமையால் ஆகாயத்தில் நீலநிறம் முதலியதைப்போல, தேஹம், இந்திரியம் இவற்றின் குணங்களும், காரியங்களும், பரிசுத்தமாயும் ஸச்சித்ஸ்வரூபமாயுமுள்ள ஆத்மாவிடம் இருப்பதாக ப்ரமத்தால் எண்ணுகின்றனர்.

ஐந்து பூதங்களிலொன்றுன ஆகாயத்தில் ஒருவித நிறமும் கிடையாது. நிறம் தேஜஸ்ஸைச் சேர்ந்தது. ஆனுலும் ஆகாயத்தைப் பார்த்தோமானால் நம் கண்களுக்கு நீலநிறமாகக் காண்கிறது. இதைக்கொண்டு அவிவேகிகள் “ஆகாயம் நீலநிறமானது” என்று சொல்கின்றனர். ஐந்து பூதங்களையும் அதன் அதன் குணங்களையும் நன்கு தெரிந்து கொண்டவர்கள் “ஆகாசத்தில் நிறமே கிடையாது. வெகு தூரத்திலிருந்து பார்ப்பதால் நம் கண்களுக்கு நீலமாகத் தோன்றுகிறது. அது ப்ரமம்தான்" என்று நினைப்பார்கள். அது போல ஆத்மா ஸத்தாயும், சித்தாயும், ஆனந்தமாயும் உள்ளது. பிறப்பு, வளர்ச்சி, பால்யம், யௌவனம் முதலானவையெல்லாம் தேஹத்தைச் சேர்ந்தது. பார்ப்பது, கேட்பது முதலியவை இந்திரியங்களைச் சேர்ந்தது. தேஹத்தையும் இந்திரியங்களையும் சேர்ந்த இந்த

தர்மங்களை அவிவேகத்தால் ஆத்மாவில் இருப்பதாக எண்ணுகின்றனர். தேஹம், இந்திரியம் இவைகளின் ஸ்வரூபத்தையும் ஆத்மாவின் ஸ்வரூபத்தையும் நன்கு பிரித்துத் தெரிந்துகொள்வது வீவேகம். நன்கு இந்த விவேகம் உள்ளவர்கள் தேஹ இந்திரிய தர்மங்களை ஆத்மாவில் இருப்பதாக நினைக்கமாட்டார்கள். **(21)**

**(அவதாரிகை)** ஆனாலும் ஒவ்வொருவனும் 'நான் இக் காரியத்தைச் செய்கி றேன். இதன் பயனை அனுபவிக்கிறேன்' என எண்ணுகிறான். இந்தக் கர்த்ருத்வமும் (செய்வது) போக்த்ருத்வமும் (அநுபவிப்பது) தேஹேந்திரியங்களைச் சேர்ந்ததாகக் கூறமுடியாததால் ஆத்மாவினிட முள்ளதாகத்தானே கூறவேண்டும்? எனில் இதுவும் ஆத்மாவுக்குக் கிடையாதெனக் கூறுகிறார்: -

## अज्ञानान्मानसोपाधेः कर्तृत्वादीनि चात्मनि ।
## कल्प्यन्तेऽम्बुगते चन्द्रे चलनादि यथाम्भसः ॥ २२ ॥

**அஜ்ஞானன்மானஸோபாதே⁴: கர்த்ருத்வாதீ³னி சாத்மனி ।**
**கல்ப்யந்தே(அ)ம்பு³க³தே சந்த்³ரே சலநாதி³ யதா²ம்ப⁴ஸ: ॥ 22 ॥**

நீரிலுள்ள அசைவு முதலியதை நீரில் தோன்றும் சந்திரனிடமும் இருப்பதாக எண்ணுவதுபோல மனமென்னும் உபாதியைச் சேர்ந்த கர்த்ருத்வம் முதலியவை களை அறியாமையால் ஆத்மாவில் இருப்பதாக நினைக்கின்றனர்.

ஓடும் தண்ணீரில் சந்திரனைப் பார்த்தால் சந்திரன் அசைவதுபோல் தோன்றும். உண்மையில் ஜலம்தான் அசைகிறது. அதனால் அதற்குள் தோன்றும் சந்திரபிம்பமும் அசைவதுபோல் தோன்றுகிறது. ஆகாசத்திலுள்ள சந்திரனுக்கு அசைவு முதலியன ஒன்றும் கிடையாது. அதுபோல கார்யங்களைச் செய்வதோ, அதன் பலனை அனுபவிப் பதோ எல்லாம் மனம்தான். மனதின் ஸ்வரூபத்தையும் ஆத்மாவின் ஸ்வரூபத்தை யும் நன்கு பிரித்துத் தெரிந்து கொள்ளாதவர்களுக்கு மனமும் ஆத்மாவும் ஒன்றாகத் தான் தெரியும். அவர்கள் அஞ்ஞானத்தால் மனதிலுள்ள கர்த்ருத்வாதிகளை ஆத்மாவில் இருப்பதாக தவறாக எண்ணுகின்றனர். ஆத்மாவுக்கு உண்மையில் கர்த்ருத்வாதிகள் ஒன்றும் கிடையாது. **(22)**

**(அவதாரிகை)** ராகம், இச்சை, ஸுகம் துக்கம் முதலியவைகள் ஆத்மாவைச் சேர்ந்ததாக தார்க்கிகர்கள் கூறுகிறார்களே எனில், அது தவறு என்கிறார்: -

## रागेच्छा सुखदुःखादि बुद्धौ सत्यां प्रवर्तते ।
## सुषुप्तौ नास्ति तन्नाशे तस्माद्बुद्धेस्तु नात्मनः ॥ २३ ॥

**ராகே³ச்சா² ஸுக²து³:கா²தி³ பு³த்³தௌ⁴ ஸத்யாம் ப்ரவர்ததே ।**
**ஸுஷுப்தௌ நாஸ்தி தந்நாஶே தஸ்மாத்³பு³த்³தே⁴ஸ்து நாத்மன: ॥ 23 ॥**

அன்பு, ஆசை, ஸுகம், துக்கம் முதலியவை புத்தியிருந்தால் ஏற்படுகிறது. ஸுஷுப்தியில் புத்தி மறைந்த பொழுது இவை ஏற்படுகிறதில்லை. ஆகையால் இவை

புத்தியைச் சேர்ந்தது. ஆத்மாவைச் சேர்ந்ததல்ல.

மனைவியிடம் அன்பு ஏற்படுகிறது. பணம், வீடு முதலான பொருள்களில் ஆசை உண்டாகிறது. விரும்பும் பொருள் கிடைத்தால் அதிலிருந்து ஸுகமும், விரும்பும் பொருள் கிடைக்காவிட்டாலும் அல்லது வெறுப்புள்ள பொருள் கிடைத்தாலும் துக்கமும் உண்டாகிறது. இவைகளெல்லாம் ஆத்மாவைச் சேர்ந்ததாக தார்கிகர்கள் சொல்கின்றனர். நாம் இதை அந்வய வியதிரேகங்களைக் கொண்டு தீர்மானிக்கவேண்டும். இவை ஆத்மாவைச் சேர்ந்ததானல், ஆத்மா எப்பொழுதுமிருப்பதால். இவையும் எப்பொழுதும் ஏற்பட்டுக்கொண்டிருக்கவேண்டும். அப்படி ஏற்படுவதில்லை. ஜாகரம், (விழிப்பு) ஸ்வப்னம் (கனவு) எனும் இரண்டு அவஸ்தைகளில்தான் இவை ஏற்படுகின்றன. ஸுஷுப்தியில் ஏற்படுவதில்லை. ஆகவே ஆத்மாவைச் சேர்ந்தவையல்ல. பின் எதைச் சேர்ந்தது எனில், புத்தியைச் சேர்ந்தவையென்று அவயவியதிரேகங்களால் தீர்மானிக்கலாம். அதாவது மனதும், இந்திரியங்களும் சேர்ந்து வேலை செய்யுமிடம் ஜாகரம். இந்திரியங்கள் அடங்கி மனம் மட்டும் வேலை செய்யுமிடம் ஸ்வப்னம். இந்திரியம், மனம் இரண்டும் ஒடுங்கிப்போன இடம் ஸுஷுப்தி. முதல் இரண்டு அவஸ்தைகளிலும் மனம் வேலை செய்கிறது. அங்குதான் ஆசை முதலியவை ஏற்படுகின்றன. மனமில்லாத ஸுஷுப்தியில் இவை ஏற்படுவதில்லை. ஆகையால் இவையெல்லாம் மனதைச் சேர்ந்ததே தவிற ஆத்மாவைச்சேர்ந்தவையல்ல. ப்ரமத்தால் தார்க்கிகர்கள் ஆத்மாவைச் சேர்ந்ததாக எண்ணுகின்றனர். **(23)**

**(அவதாரிகை)** நம் புத்திக்குத் தோன்றும் தர்மங்களெல்லாம் ஆத்மாவில் இல்லையென்றால் ஆத்மஸ்வரூபம் எப்படிப் பட்டது எனில் கூறுகிறார்: -

**प्रकाशोऽर्कस्य तोयस्य शैत्यमग्नेर्यथोष्णता ।**
**स्वभावः सच्चिदानन्दनित्य निर्मलताऽऽत्मनः ॥ २४ ॥**

**ப்ரகாஶோ(அ)ர்கஸ்ய தோயஸ்ய ஶைத்யமக்³னேர்யதோ²ஷ்ணதா ।**
**ஸ்வபா⁴வ: ஸச்சிதா³நந்த³நித்ய நிர்மலதா(ஆ)த்மன: ॥ 24 ॥**

ஸூரியனுக்கு வெளிச்சம்போலவும், தண்ணீருக்கு குளிர்ச்சிபோலவும், நெருப்புக்குச் சூடுபோலவும், ஸத், சித், ஆனந்தம், எப்பொழுதும் பரிசுத்தி இவைதான் ஆத்மாவின் ஸ்வபாவம்.

ஸத் (எப்பொழுதும் இருப்பது), சித் (அறிவு), ஆனந்தம், எப்பொழுதும் பரிசுத்தி (கலப்பில்லாதது) இவைதான் ஆத்மாவைச் சேர்ந்த தர்மம். உலக வழக்கை யொட்டி தர்மம் என்று சொன்னோமேதவிற இவை ஆத்மாவின் ஸ்வரூபத்திலேயே சேர்ந்தது. ஸூர்யனிடம் வெளிச்சமும் தண்ணீரில் குளிர்ச்சியும், நெருப்பில் சூடும் அததை விட்டுப்பிரிக்க முடியாமல் அததன் ஸ்வரூபத்திலேயே சேர்ந்திருப்பதுபோல ஸச்சிதானந்தமும் ஆத்மாவைவிட்டுப் பிரிக்கமுடியாமல் ஆத்மஸ்வரூபத்திலேயே சேர்ந்தது. இதைத்தவிற ஆத்மபோதம் ஆத்மாவில் வேறு யாதொரு தர்மமும் உண்மையில் கிடையாது. **(24)**

**(அவதாரிகை)** ஆத்மாவில் கர்த்ருத்வம் முதலான தர்மங்கள் ஒன்றுமில்லா விடில், (அஹம் ஜாநாமி) 'நான் அறிகிறேன்' என்று சொல்வது எப்படிப்பொருந்தும்? ஆத்மாவில் ஞானம் ஏற்பட்டு ஞானகர்த்தாவாக ஆனுல் தானே' அறிகிறேன் 'அறிகிறேன்' என்று சொல்லமுடியும்? எனில் கூறுகிருர்: -

**आत्मनः सच्चिदशश्च बुद्धेर्वृत्तिरिति द्वयम् ।**
**संयोज्य चाविवेकेन जानामीति प्रवर्तते ॥ २५ ॥**

**ஆத்மன: ஸச்சித³ஶஶ்ச பு³த்³தே⁴ர்வ்ருத்திரிதி த்³வயம் ।**
**ஸம்யோஜ்ய சாவிவேகேன ஜாநாமீதி ப்ரவர்ததே ॥ 25 ॥**

ஆத்மாவின் ஸச்சிதம்சத்தையும், புத்தியின் விருத்தியையும் அவிவேகத்தால் ஒன்று சேர்த்து 'அறிகிறேன்' என்ற வியவஹாரம் ஏற்படுகிறது.

**आत्मनो विक्रिया नास्ति बुद्धेर्बोधो न जात्विति ।**
**जीवः सर्वमलं (है) ज्ञात्वा कर्ता द्रष्टेति मुह्यति ॥ २६ ॥**

**ஆத்மனோ விக்ரியா நாஸ்தி பு³த்³தே⁴ர்போ³தோ⁴ ந ஜாத்விதி ।**
**ஜீவ: ஸர்வமலம் (ஹை) ஜ்ஞாத்வா கர்தா த்³ரஷ்டேதி முஹ்³யதி ॥ 26 ॥**

ஆத்மாவுக்கு விகாரமில்லை. (ஜடமான) புத்திக்கு அறிவு ஒருக்காலும் கிடை யாது. எல்லாவற்றையும் நான் என எண்ணி ஜீவன், நான் கர்த்தா (செய்கிறவன்), நான் த்ரஷ்டா (பார்க்கிறவன்) என்று ப்ரமத்தையடைகிறுன்.

ஒரு பொருளைப் பார்த்துத் தெரிந்துகொண்டதும்

**अहं इदं जानामि**

**அஹம் இத³ம் ஜாநாமி**

'நான் இதை அறிகிறேன்' என்று கூறுகிறுன். இதைக் கொஞ்சம் ஆராய்ந்து பார்ப்போம். 'நான் அறிகிறேன்' என்று கூறுவதால், இதற்கு முன்னால் தன்னிடம் இல்லாதிருந்த அறிவு இப்பொழுது ஏற்பட்டதாகத் தெரிகிறது. அந்த அறிவுக்கு அஹம்பதார்த்தம் ஆச்ரயமாக அதாவது கர்த்தாவாக ஆகிறது இங்கு அறிவு என்பது என்ன? அஹம்பதார்த்தம் யாது? என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அஹம்பதார்த்தம் ஆத்மாவானுல் முன் இல்லாமலிருந்த போதம் (அறிவு) என்பது அதில் ஏற்படுவதால் அது விகாரமுள்ளதாக ஆகிவிடும். ஆத்மாவோ நிர்விகாரம். ஆதலால் ஆத்மாவை அஹம்பதார்த்தமாகச் சொல்லமுடியாது. புத்தியோ ஜடமானபடியால் அறியும் சக்தி அதற்கு இல்லை. அதனுல் அதுவும் அஹம்பதார்த்தமாகாது. ஆகவே ஆத்மாவையும் புத்தியையும் தனித்தனியாகப் பிரித்துத் தெரிந்து கொண்டுவிட்டால் 'நான் அறிகிறேன்' என்ற வியவஹாரத்திற்கே இடமில்லை. அவ்விதமில்லாமல், பழுக்கக்காய்ச்சின இரும்பில் பிரிக்கமுடியாதபடி நெருப்பு சேர்ந்திருப்பதுபோல அத்யாஸத்தால் ஆத்மாவும் மனமும் சேர்ந்துவிட்டது.

மனதுடன் சேர்ந்திருக்கும் ஆத்மாவிற்குத் தான் ஜீவன் என்று பெயர். விஷயங்களைத் தெரிந்து கொள்ளும்போது மனம் அந்தந்த விஷயத்தின் உருவத்தை அடைகிறது. அதற்கு அந்தக்கரண விருத்தி என்று பெயர். அதில் சைதன்யம் ப்ரதிபிம்பிக்கிறது. சைதன்யத்துடன் கூடிய விருத்திக்குத்தான் ஞானம் என்று பெயர். ஆகவே

**अहं इदं जानामि**

**அஹம் இத³ம் ஜாநாமி**

(நான் இதை அறிகிறேன்)

என்று கூறுமிடத்தில் அஹம் பதார்த்தத்தில் ஆத்மா, மனம் இரண்டும் சேர்ந்திருப்பதால் சைதன்யத்தைக் கொண்டு விஷயங்களின் அறிவு ஏற்படுகிறது. விருத்திக்கு ஆச்ரயமாக மனமிருப்பதால் அஹம்பதார்த்தம் கர்த்தாவாகவும் ஆகிறது. இது மட்டுமா? தேஹத்திலுள்ள இந்திரியம் முதலியவற்றோடும் ஆத்மா சேர்ந்துகொண்டு அவைகளையும் 'நான்' என்று எண்ணி 'பார்க்கிறேன், செய்கிறேன்' என்றெல்லாம் ஜீவன் வியவஹாரம் செய்கிறான். இவற்றிற்கெல்லாம் அத்யாஸம்தான் காரணம். ஆத்மஸ்வரூபமான ஞானம் நித்யமாயிருந்தாலும் அந்தக்கரணவிருத்தி புதிதாக உண்டாவதால் 'நான் அறிகிறேன்' என்று சொல்கிறான். **(25-26)**

(**அவதாரிகை**) அத்யாஸத்தால் ஏற்படும் நிலைமையையும், அது நீங்கினால் ஏற்படும் நிலைமையையும் விவரிக்கிறார்: -

**रज्जुसर्पवदात्मानं जीवो ज्ञात्वा भयं वहेत् ।**
**नाहं जीवः परात्मेति ज्ञातश्चेन्निर्भयो भवेत् ॥ २७ ॥**

**ரஜ்ஜுஸர்பவதா³த்மானம் ஜீவோ ஜ்ஞாத்வா ப⁴யம் வஹேத் ।**
**நாஹம் ஜீவ: பராத்மேதி ஜ்ஞாதஸ்சேன்னிப⁴யோ ப⁴வேத் ॥ 27 ॥**

கயிற்றை பாம்பாக (எண்ணுவது) போல தன்னை ஜீவனாக எண்ணி பயமடை கிறான். நான் ஜீவனல்ல, பரமாத்மா என்று அறிந்தால் பயம் நீங்கினவனாக ஆகிறான்.

மாலை வேளையில் லேசான இருளில் ஆற்றங்கரையோரமாகச் செல்லும் மனிதன் அங்கே கீழே வளைந்து கிடக்கும் கயிற்றைப்பார்த்து ப்ரமத்தால் பாம்பென நினைத்து பயமடைகிறான். அது காற்றினால் சிறிது அசைந்தாலும் தன்னைக் கடிக்க சீறிக்கொண்டு வருவதாக எண்ணி பயந்து ஓடிக் கீழே விழுந்து பலவித துன்பங்களை யனுபவிக்கிறான். இவன் பாம்பாக நினைத்தாலும் கயிற்றில் ஒருவித மாறு பாடும் ஏற்படுவதில்லை. பிறகு நண்பனுடன்கூட தீபத்தை கொண்டுவந்து அருகில் சென்று நண்பன் வார்த்தையால் உற்றுப் பார்த்ததும் இது பாம்பல்ல, கயிறுதான் என்று தெரிந்துகொள்கிறான். பயமெல்லாம் நீங்கிவிடுகிறது. இது போலவே தன் உண்மை ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமல் தேஹம், இந்திரியம், மனம் முதலியவற்று டன் சேர்ந்து அவைகளையே ப்ரமத்தால் நான் என்று எண்ணி தான் ஜீவன் என்று

உலகில் வியவஹாரம் செய்கிறன். நான் என்று எண்ணும் தேஹேந்திரியாதிகள் பரிச்சின்னமாக (அளவுக்குட்பட்டதாக) இருப்பதால் தன்ஜனக் குறுகியவனுக எண்ணுகிறன். தன்ஜனக்காட்டிலும் வேறுக உண்மையான பிரபஞ்சம் இருப்பதாக எண்ணி அதன் மூலம் பயம், துன்பம் முதலியவற்றை அடைகிறன். ப்ரமத்தால் இவன் வேறுக நிஜனத்தாலும் ஆத்மஸ்வரூபத்தில் ஒருவித மாறுபாடும் ஏற்படுவதில்ஜல. எப்பொழுது சாஸ்திரத்தாலும், ஆசார்ய உபதேசத்தாலும் விவேகம் ஏற்பட்டு தன் உண்மை ஸ்வரூபத்தை அறிந்துகொள்கிறுனே, அப்பொழுது நான் தேஹமல்ல. இந்திரியமல்ல, ஜீவனல்ல; நான் ஸச்சிதானந்தஸ்வரூபம், பரமாத்மா. என்ஜனக்காட்டிலும் வேறுக பிரபஞ்சம் என்பது கிடையாது என்று தெரிந்து கொள்கிறன். பயமெல்லாம் நீங்கி ஆனந்தமாயிருக்கிறன்.

**(அவதாரிகை)** நம் தேஹத்தில் ஆத்மாவின் அருகிலேயே இந்திரியம், மனம் முதலியவை இருக்கின்றன. வெளியில் எட்டியிருக்கும் பொருள்கஜளயெல்லாம் காட்டும் அவைகள், தன் அருகில் நெருங்கியிருக்கும் ஆத்மாவை ஏன் நமக்குக் காட்டிக்கொடுப்பதில்ஜல என்பதற்கு பதில் கூறுகிறர்: -

## आत्मावभासयत्यको बुद्धयदिनीन्दिन्द्रयाण्यपि ।
## दीपो घटादिवत्स्वात्मा जडैस्तैर्नावभस्यते ॥ २८ ॥

**ஆத்மாவபா⁴ஸயத்யகோ பு³த்³த⁴யதி³னீந்தி³ந்த்³ரயாண்யபி ।**
**தீ³போ க⁴டாதி³வத்ஸ்வாத்மா ஜடை³ஸ்தைர்னாவப⁴ஸ்யதே ॥ 28 ॥**

தீபம், குடம் முதலியவற்றை பிரகாசப்படுத்துவது போல ஆத்மா ஒருவன் தான் புத்தி, மனம், இந்திரியம் முதலியவற்றை விளங்கவைக்கிறன். ஜடமான அவைகளால் ஆத்மா பிரகாசிக்கப்படுவதில்ஜல.

வீட்டில் ஒரு தீபத்தை ஏற்றிவைத்தால் அது தன் ஒளியால் அங்குள்ள பொருள்கஜளயெல்லாம் நமக்குக் காட்டுகிறது. ஒளியில்லாத அப்பொருள்கள் தீபத்தைக் காட்டுவதில்ஜல. அவை இருப்பதையே தீபத்தின் உதவியைக் கொண்டு தான் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. அப்படியிருக்க அவை எப்படி மற்றப்பொருள்கஜளக் காட்ட முடியும்? இதுபோலவே உலகில் ஆத்மா ஒன்றுதான் சித் (பிரகாச) வஸ்து. மற்றவையெல்லாம் ஜடப்பொருள். ஆகையால் ஜடமான புத்தி, இந்திரியம் முதலியவை ஆத்ம ஸ்வரூபத்தை பிரகாசப்படுத்த முடியாது. ஆத்மாதான் அவைகஜள பிரகாசப்படுத்துகிறது. அவைகள் இருப்பதையே ஆத்ம பிரகாசத்தால் தான் அறிந்துகொள்ளுகிறேம். கண் ரூபத்தைக் காட்டுவதும், காது சப்தத்தைக் காட்டுவதும், மற்றவைகள் தன் தன் விஷயங்கஜளக் காட்டுவதும் ஆத்ம சைதன்ய பிரகாசத்தின் உதவியைக்கொண்டு தான். விவேகமில்லாதவர்கள் அவைகளே விஷயங்கஜளக் காட்டுவதாக ப்ரமத்தால் எண்ணுகின்றனர். **(28)**

**(அவதாரிகை)** இந்திரியம், மனம் முதலியவைகளால் ஆத்மாவை அறிந்து கொள்ள முடியாவிட்டால் வேறு எதைக்கொண்டு ஆத்மாவை அறிந்துகொள்வது எனில் கூறுகிறார்: -

**स्वबोधे नान्यबोधेच्छा बोधरूपतयाऽऽत्मनः ।**
**न दीपस्यान्यदीपेच्छा यथा स्वात्मप्रकाशने ॥ २९ ॥**

**ஸ்வபோ3தே4 நான்யபோ3தே4ச்சா2 போ3த4ரூபதயா(ஆ)த்மனः ।**
**ந தீ3பஸ்யான்யதீ3பேச்சா2 யதா2 ஸ்வாத்மப்ரகாஶனே ॥ 29 ॥**

ஆத்மா அறிவுவடிவமானதால் அதை அறிந்துகொள்ள வேறெரு அறிவு வேண்டியதில்லை. தீபம் தன்னை பிரகாசப்படுத்த மற்றேர் தீபத்தை எதிர்பார்ப்பதில்லை.

உலகில் எப்பொருளையும் ஸூர்யன், சந்திரன், நக்ஷத்திரம், தீபம் முதலியவைகளில் ஏதாவது ஒரு பிரகாசத்தின் உதவியைக் கொண்டுதான் தெரிந்துகொள்ளுகிறேம். அந்த ரீதியில் நமக்கு ஆத்மாவை அறியப்படுத்தும் பிரகாசப்பொருள் எது என்ற கேள்விக்கு, ஆத்மாவை அறியப்படுத்தும் வேறொரு பிரகாசப்பொருள் கிடையாது; ஆத்மாவே ஸ்வயம் பிரகாசமானதால் அது தேவையுமில்லை என்பது பதில். ஸூர்ய வெளிச்சத்தைக் கொண்டு எல்லாப் பொருள்களையும் பார்க்கிறேம். ஸூர்யனைப் பார்க்க வேறெரு பிரகாசப் பொருளை நாம் தேடுவதில்லை. அது ஒளிமயமாயிருப்பதால் தன்னையும் தானே காட்டிக்கொள்கிறது. அதுபோல ஆத்மாவும் அழிவற்ற ஸ்வப்ரகாச வஸ்துவானதால் அதை அறிய மற்றெரு பிரகாசவஸ்து தேவையில்லை. எல்லாப் பொருள்களையும் ஆத்மபிரகாசத்தைக் கொண்டு அறிய வேண்டியிருப்பதால் ஆத்மாவை பிரகாசப்படுத்தும் வேறெரு பொருள் உலகில் கிடையாது. இந்த விஷயத்தை நான்காவது சுலோகத்தின் சுலோகத்தின் விரிவுரையில் காட்டியிருக்கிறேம். **(29)**

**(அவதாரிகை)** ஆத்மா ஸ்வப்ரகாச வஸ்துவானுல் எல்லோருக்கும் அது ஏன் தெரியவில்லை. ஏன் அக்ஞானிகளாக ஜனங்கள் துன்புறுகின்றனர். ஆத்மாவை அறிவிக்கும் பொருள் வேறென்றில்லாததால் அதை அறிய முயற்சிப்பதும் வீண் என்னும் கேள்விக்கு விடை கூறுகிறர்: -

**निषिध्य निखिलोपाधीन् नेति नेतीति वाक्यतः ।**
**विद्यादैक्यं महावाक्यैर्जीवात्मपरमात्मनोः ॥ ३० ॥**

**நிஷித்4ய நிகி2லோபாதீ4ன் நேதி நேதீதி வாக்யதः ।**
**வித்3யாதை3க்யம் மஹாவாக்யைர்ஜீவாத்மபரமாத்மனோः ॥ 30 ॥**

நேதி நேதி என்ற வாக்யத்தால் எல்லா உபாதிகளையும் விலக்கி மஹாவாக்யங்களால் ஜீவாத்மா, பரமாத்மா இவ்விரண்டினுடைய அபேதத்தை அறிந்துகொள்ள வேண்டும்.

ஆத்மா ஸ்வப்ரகாச வஸ்துவாயிருந்தாலும் தேஹம், இந்திரியம் முதலான பல பொருள்கள் அதை மறைத்துக் கொண்டிருப்பதால் நமக்குத் தெரிவதில்லை. ஸூர்யன் ஒளிமயமாயிருந்தாலும் மேகம் மறைத்தால் நன்கு புலப்படுவதில்லை. ஒளியுள்ள வைரம் மண்ணுக்குள் புதைந்திருந்தால் நமக்குத் தெரிவதில்லை. இது

மட்டுமல்ல. ஆத்மாவை மறைத்துக்கொண்டு அதன் பிரகாசத்தால் விளங்கும் தேஹாதிகளையே ஆத்மாவென்று அறியாமையால் எண்ணுகிறோம். இந்த தேஹாதிகள் துன்புறும் பொழுது ஆத்மாவுக்கே துக்கம் வந்ததாக எண்ணி கஷ்டப் படுகிறோம். இந்த கஷ்டம் விலகவேண்டுமானால் ஆத்மாவை மறைத்துக்கொண்டிருக் கும் தேஹாதிகளை விலக்க வேண்டும். விலக்குவது என்றால் நன்கு விசாரித்து ஒவ்வொன்றாக ஆத்மாவல்ல என்று தெரிந்துகொள்வது. தேஹம் முதலான உபாதிகளை ஆத்மாவல்ல என்று விலக்காதவரை ஆத்மஸ்வரூபத்தை அறிந்து கொள்ள முடியாது. ப்ரமத்தால் கயிற்றை பாம்பென நினைத்தவன் பாம்பல்ல என்று தெரிந்துகொள்ளாவிட்டால் எப்படி கயிற்றை அறிந்துகொள்ளக்கூடும்?

பிருஹதாரண்யக உபநிஷத்தில் (2-3) பிரபஞ்சம் முழுவதையும் மூர்த்தம், அமூர்த்தம் என இருவகையாகப் பிரித்து இரண்டும் ப்ரஹ்மத்தின் ரூபமென முதலில் ஆரோபம் செய்து முடிவில்

**अथात आदेशः नेति नेति**

**அதா²த ஆதே³ஶ: நேதி நேதி**

என்று மூர்த்தமும் ப்ரஹ்மமல்ல, அமூர்த்தமும் ப்ரஹ்மமல்ல என்று கூறப்பட்டிருக் கிறது. இதுபோன்ற உபநிஷத் வாக்யங்களைக்கொண்டு யுக்தியால், ஆத்மாவை மறைத்துக்கொண்டிருக்கும் பொருள்கள் யாவற்றையும் ஆத்மாவல்ல என்று ஒதுக்கி த்தள்ளவேண்டும். மேகம் நீங்கியவுடன் ஸூர்யன் நன்கு தெரிவதுபோல இம்மறைவு கள் நீங்கியதும் ஸ்வப்ரகாசமான ஆத்ம வஸ்து தானே விளங்கும். இவ்வாறு உபாதிகள் நீங்கின ஆத்மாவில் ப்ரஹ்மலக்ஷணங்களெல்லாம் காணப்படுவதைக் கொண்டு

**अहं ब्रह्मास्मि**

**(அஹம் ப்³ரஹ்மாஸ்மி)**

முதலான மஹாவாக்யங்களால் ஆத்மாவே ப்ரஹ்மம் என்று தெரிந்துகொள்ள வேண்டும். மறைவை நீக்குவதில்தான். நம் முயற்சிகளுக்கு உபயோகமேதவிற ஸ்வப்ரகாசமான ஆத்மாவை ப்ரகாசப்படுத்துவதிலல்ல.

இவ்விஷயம்

**स्वयं प्रकाशते ह्यात्मा मेघापायेंशुमानिव**

**ஸ்வயம் ப்ரகாஶதே ஹ்யாத்மா மேகா⁴பார்யேஶுமானிவ**

என்ற 4 - வது சுலோகத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. **(30)**

**(அவதாரிகை)** சரீராதிகள் ஆத்மாவல்ல என்பதற்கு யுக்தியைக் காட்டுகிறுர்: -

**आविद्यकं शरीरादि दृश्यं बुद्बुदवत् क्षरम् ।**
**एतद्विलक्षणं विद्यादहं ब्रह्मेति निर्मलम् ॥ ३१ ॥**

**ஆவித்³யகம் ஶரீராதி³ த்³ருஶ்யம் பு³த்³பு³த³வத் க்ஷரம் ।**
**ஏதத்³விலக்ஷணம் வித்³யாத³ஹம் ப்³ரஹ்மேதி நிர்மலம் ॥ 31 ॥**

சரீரம் முதலியவை அவித்யையால் ஏற்பட்டது. அறியப்படும் பொருள். நீர்க்குமிழிபோல அழியக்கூடியது. இவைகளைக் காட்டிலும் வேறுன நிர்மலமான ப்ரஹ்மம் நான் என்று தெரிந்துகொள்ளவேண்டும்.

சரீரம் முதலியவைகளுக்கு மாயைதான் உபாதான காரணம். அதிலிருந்து ஏற்பட்டது. அதனுல் இவை பொய்யானது. ஆத்மாவோ மாயையால் ஏற்பட்டதல்ல. ஸ்வதஸ்ஸித்தமானது, உண்மைப் பொருள். மேலும் இவைகளை இந்திரியங்களாலும் மனதாலும் அறிந்துகொள்கிறோம். ஆகவே அறியப்படும் பொருள் இது. அதனுல் ஜடம். ஆத்மாவோ ஒன்றினுலும் அறியப்படக்கூடியதில்லை. அது அறிவு ஸ்வரூபம், சேதனம். சரீராதிகள் அழியும் பொருள். ஆத்மாவோ அழிவற்ற வஸ்து. ஆத்மாவுக்கும் தேஹாதிகளுக்கும் இவ்வளவு வேற்றுமைகள் இருப்பதால் நான் இந்த தேஹாதிகளல்ல. பின் நான் யார் எனில் இந்த பிரபஞ்சத்திற்குள் அகப்படாத, தோஷமற்ற எங்கும் நிறைந்த ப்ரஹ்மமே நான் என்ற ஞானம் மஹாவாக்யத்திலிருந்து ஏற்படும்.

**(31)**

**(அவதாரிகை)** வேதாந்த வாக்யங்களிலிருந்து நான் ப்ரஹ்ம ஸ்வரூபம் தான் என்பதை அறிந்துகொண்டு அதன்பின் மனனம் செய்யவேண்டிய விதத்தைக் கூறுகிறுர்: -

**देहान्यत्वात् न मे जन्मजराका इलयादयः ।**
**शब्दादिविषयैः सङ्गो निरिन्द्रियतया न च ॥ ३२ ॥**

**தே³ஹான்யத்வாத் ந மே ஜன்மஜராகா இலயாத³ய: ।**
**ஶப்³தா³தி³விஷயை: ஸங்கோ³ நிரிந்த்³ரியதயா ந ச ॥ 32 ॥**

**अमनस्त्वात् न मे दुःखरागद्वेषभयादयः ।**
**अप्राणो ह्यमनाः शुभ्र इत्यादिश्रुतिशासनात् ॥ ३३ ॥**

**அமனஸ்த்வாத் ந மே து³:க²ராக³த்³வேஷப⁴யாத³ய: ।**
**[1]அப்ராணே ஹ்யமனு: ஶுப்⁴ர இத்யாதி³ஶ்ருதிஶாஸனுத் ॥ 33 ॥**

**निर्गुणो निष्क्रियो नित्यो निर्विकल्पो निरञ्जनः ।**
**निर्विकारो निराकारो नित्यमुक्तोऽस्मि निर्मलः ॥ ३४ ॥**

**நிர்கு³ணோ நிஷ்க்ரியோ நித்யோ நிர்விகல்போ நிரஞ்ஜன: ।**
**நிர்விகாரோ நிராகாரோ நித்யமுக்தோ(அ)ஸ்மி நிர்மல: ॥ 34 ॥**

நான் தேஹத்தைக்காட்டிலும் வேருனதால் பிறவி, மூப்பு, இளைப்பு, சாவு முதலியவைகள் எனக்கு கிடையாது. நான் இந்திரியமல்லாததால் எனக்கு சப்தம் முதலான விஷயங்களுடன் சேர்க்கை கிடையாது.

நான் மனமல்லாததால் துன்பம், விருப்பு, வெறுப்பு, பயம், முதலியவை கிடையாது. ஆத்மா பிராணனுமல்ல, மனமுமல்ல என்று முண்டக உபநிஷத்தில் கூறியிருப்பதால் என்னிடம் குணமும் க்ரியையும் கிடையாது. நான் அழிவற்றவன். என்னிடம் விகல்பம் (வேற்றுமை) பிறப்பொருளின் சேர்க்கை, மாறுபாடு, உருவம், தோஷம் ஒன்றும் கிடையாது. [[1] முண்டகோபநிஷத் 2-1-2.]

இது ஆத்மா, இது அனாத்மா என்று பிரித்துத் தெரிந்து கொள்ளாமல் அவிவேகிகள் ப்ரமத்தால் அனாத்மாவான தேஹம் முதலியவற்றையே ஆத்மா வென எண்ணுகின்றனர் அதனால் அனாத்மாவான தேஹாதிகளுடைய தர்மங்களை யெல்லாம் ஆத்மாவிலிருப்பதாக நினைத்து துன்புறுகின்றனர் முன்சுலோகத்தில் கூறியுள்ளபடி தேஹாதிகளைக்காட்டிலும் வேருக ஆத்மாவை அறிந்துகொண்ட விவேகி தேஹாதிகளின் தர்மங்கள் ஆத்மாவுக்கு கிடையாது என்பதை யுக்திகளால் தீர்மானித்துக்கொள்கிருன். அதாவது பிறப்பு, நரை, இளைப்பு, சாவு முதலியவை தேஹத்தைச் சார்ந்தது. தேஹம் தான் பிறக்கிறது, இளைக்கிறது, சாகிறது. மூப்பும் அதற்குத்தான். நான் தேஹமல்ல. ஆதலால் எனக்கு பிறப்பு, சாவு முதலியவை கிடையாது. சப்தம் ஸ்பர்சம், ரூபம் முதலான விஷயங்களுடன் காது, த்வக், கண் முதலான புலன்கள் சேருகின்றன. நான் அந்த இந்திரியமல்ல. அதனால் சப்தாதி விஷயங்களின் சேர்க்கை எனக்குக் கிடையாது. துன்பம், விருப்பு, வெறுப்பு, பயம் முதலியவை மனதைச் சேர்ந்தவை. நான் மனமல்ல, ஆகையால் அவைகள் எனக் குக் கிடையாது. நான் பிராணனுமல்ல. ஆதலால் எனக்கு ஒரு க்ரியையும் கிடையாது. ஒரு குணமும் கிடையாது. ஸாதாரணமாக உலகில் காணப்படும் வேற்றுமை, மாறுபாடு, உருவம், தோஷம் முதலான ஒரு தர்மமும் என்னிடம் கிடையாது. உண்மையில் உலகப்பொருளால் பந்தமும் எனக்குக் கிடையாது. **(32-34).**

**(அவதாரிகை)** ஆத்மாவில் ஒரு தர்மமுமில்லையானல் ஆத்ம ஸ்வரூபம் எப்படிப்பட்டது எனில் கூறுகிறார்: -

**अहमाकाशवत्सर्वबहिरन्तर्गतोऽच्युतः ।**
**सदा सर्वसमः शुद्धो निस्सङ्गो निर्मलोऽचलः ॥ ३५ ॥**

**அஹமாகாஶவத்ஸர்வப³ஹிரந்தர்க³தோ(அ)ச்யுத: ।**
**ஸதா³ ஸர்வஸம: ஶுத்³தோ⁴ நிஸ்ஸங்கோ³ நிர்மலோ(அ)சல: ॥ 35 ॥**

நான் ஆகாசம்போல் (உலகிலுள்ள) எல்லாப் பொருள்களிலும் உள்ளும் வெளியும் இருப்பவன். நிலைபெயராதவன். பொருள்கள் ஏற்றத் தாழ்வாயிருந்தாலும், எங்கும் நான் ஸமமாக இருப்பவன். பரிசுத்தமானவன் ஒன்றிலும் ஓட்டாதவன். தோஷ மற்றவன். எங்கும் நிறைந்திருப்பதால் அசைவில்லாதவன். **(35)**

## नित्यशुद्ध विमुक्तैकमखण्डानन्दमद्वयम् ।
## सत्यं ज्ञानमनन्तं यत् परं ब्रह्माहमेव तत् ॥ ३६ ॥

**நித்யஶுத்³த⁴ விமுக்தைகமக²ண்டா³னந்த³மத்³வயம் ।**
**ஸத்யம் ஜ்ஞானமனந்தம் யத் பரம் ப்³ரஹ்மாஹமேவ தத் ॥ 36 ॥**

எப்பொழுதும் பரிசுத்தமானதும், பந்தமில்லாததும் ஒன்றானதும், பிரிவில்லாததும், ஆனந்த ஸ்வரூபமாயும், இரண்டற்றதும், உண்மையானதும் அறிவு ஸ்வரூபமாயும், அளவற்றதுமான அந்த பரப்ரஹ்மமேதான் நான்.

பிரஹ்மம் எப்பொழுதும் பரிசுத்தமானது. உண்மையில் ஒரு பொருளுடனும் ஸம்பந்தம் கிடையாது. அதற்கு உண்மையில் ஒருக்காலும் பந்தம் கிடையாது. அது ஒரே வஸ்து. அதைக் காட்டிலும் வேறாக அம்மாதிரியான பொருளோ, விலக்ஷணமான பொருளோ ஒன்றும் கிடையாது. அதன் ஸ்வரூபத்திலும் வேற்றுமை கிடையாது. முக் காலத்திலும் மாறாதது. உண்மையானது. அறிவே உருவம் கொண்டது. தேசத்தாலோ, காலத்தாலோ, பொருளாலோ, அதை அளவிடமுடியாது. உண்மையில் இவ்வித பரப்ரஹ்மஸ்வரூபமாக தானிருந்தபோதிலும், தன்னை தேஹாதிகளாக எண்ணிக்கொண்டிருந்ததால் இதை அறியவில்லை. இப்பொழுது சிரவணத்தாலும் மனனத்தாலும் ஒவ்வொன்றாக ஒதுக்கி தன் உண்மை ஸ்வரூபத்தை அறிந்ததும் நானே ப்ரஹ்மம் என தெரிந்து கொள்கிறான். **(36)**

**(அவதாரிகை)** நிதித்யாஸனத்தைக் கூறுகிறார்: -

## एवं निरन्तराभ्यस्ता ब्रह्मैवास्मीति वासना ।
## हरत्यविद्या विक्षेपान् रोगानिव रसायनम् ॥ ३७ ॥

**ஏவம் நிரந்தராப்⁴யஸ்தா ப்³ரஹ்மைவாஸ்மீதி வாஸனா ।**
**ஹரத்யவித்³யா விக்ஷேபான் ரோகா³னிவ ரஸாயனம் ॥ 37 ॥**

இவ்வாறு இடைவிடாமல் அப்யாஸம் செய்வதால் 'நான் பிரஹ்மமாகவே இருக்கிறேன்' என்ற வாஸனை உறுதிப்பட்டு, மருந்து பிணிகளைப்போக்குவதுபோல அவித்யையால் உண்டாகும் விக்ஷேபங்களைப்போக்குகிறது.

தேஹாதிகளை ஒதுக்கி நான் ப்ரஹ்மம் என்று தெரிந்து கொண்டாலும் அனாதி காலமாக லோக வாஸனை உறுதிப்பட்டிருப்பதால் மீண்டும் மீண்டும் மனதை இழுத்துச் சென்றுவிடும். அதைத் தடுக்க ப்ரஹ்மவாஸனை உறுதிப்பட்டு லோக வாஸனையின் பலம் குன்றவேண்டும். அதற்காக முன் சுலோகத்தில் கூறியதை

இடைவிடாமல் தியானம் செய்யவேண்டும். ப்ரஹ்மத்தைத் தவிற வேறென்றையும் நினையாமல் அதையே இடைவிடாமல் நினைப்பது தியானமாகும். அப்பொழுது ப்ரஹ்மவாஸனை பலப்படும். அதனால் அவித்யை நீங்கி, அதிலிருந்து உண்டாகும் மனதின் விக்ஷேபங்களெல்லாம் போய்விடும். லோகவாஸனை நசித்துவிடும். சிறந்த மருந்தை வெகுகாலம் சாப்பிட்டு வந்தால் வியாதிகள் அடியோடு நீங்கிவிடு மல்லவா! **(37)**

(**அவதாரிகை**) இவ்விதமான ப்ரஹ்மபாவனை உறுதிப்படுவதற்கு சில நியமங்களை உபதேசிக்கிறார்: -

**विविक्त देश आसीनो विरागो विजितेन्द्रियः ।**
**भावयेदेकमात्मानं तमनन्तमनन्यधीः ॥ ३८ ॥**

**விவிக்த தே³ஶ ஆஸீனோ விராகோ³ விஜிதேந்த்³ரிய: ।**
**பா⁴வயேதே³கமாத்மானம் தமனந்தமனன்யதீ⁴: ॥ 38 ॥**

தனிமையான இடத்தில் உட்கார்ந்து கொண்டு ஒன்றிலும் ஆசை கொள்ளாமல் புலன்களை அடக்கி வேறென்றிலும் புத்தியைச் செலுத்தாமல் எல்லையற்ற ஒரே வஸ்துவான ஆத்மாவை தியானம் செய்யவேண்டும். **(38)**

(**அவதாரிகை**) உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் தோன்றும் பொழுது, ஆத்மா ஒன்றுதான் உள்ளது என்று எப்படி எண்ண முடியும் எனில் கூறுகிறார்: -

**आत्मन्येवाखिलं दृश्यं प्रविलाप्य धिया सुधीः ।**
**भावयेदेकमात्मानं निर्मला काशवत्सदा ॥ ३९ ॥**

**ஆத்மன்யேவாகி²லம் த்³ருஶ்யம் ப்ரவிலாப்ய தி⁴யா ஸுதீ⁴: ।**
**பா⁴வயேதே³கமாத்மானம் நிர்மலா காஶவத்ஸதா³ ॥ 39 ॥**

பரிசுத்த மனமுள்ளவன் தன் புத்தியால் ஆத்ம ஸ்வரூபத்தில் எல்லாப் பொருளும் மறைந்து போகும்படி செய்து நிர்மலமான ஆகாசம்போல் ஒன்றான ஆத்ம வஸ்துவை தியானம் செய்யவேண்டும்.

ராகத்வேஷங்களுக்கு இடம் கொடுக்காமல் மனதை பரிசுத்தமாக்கிக்கொள்ள வேண்டும். ஸமாதியில் அமர்ந்து யோக முறைகளால் மனதையடக்கி வேறு ஒரு தோற்றமும் ஏற்படாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும். சிரவண மனனாதிகளால் தெரிந்துகொண்டுள்ள ஆத்ம ஸ்வரூபத்தையே சிந்திக்கவேண்டும். உலகத்தோற்றம் மறைந்து போகவேண்டும். மேகங்களில்லாத நிர்மலமான ஆகாசம் போன்ற ஒரே பொருளான ஆத்மாவை தியானிக்க வேண்டும். **(39)**

**रूपवर्णादिकं सर्वं विहाय परमार्थवित् ।**
**परिपूर्णचिदानन्दस्वरूपेणावतिष्ठते ॥ ४० ॥**

**ரூபவர்ணுதி³கம் ஸர்வம் விஹாய பரமார்த²வித் ।**
**பரிபூர்ணசிதா³னந்த³ஸ்வரூபேணாவதிஷ்ட²தே ॥ 40 ॥**

உண்மை அறிந்தவன் உருவம், நிறம் முதலான எல்லாவற்றையும் விட்டு விட்டு எங்கும் நிறைந்த ஞான ஆனந்த வடிவமாக இருப்பான்.

உலகத்தின் உண்மையை அறியாதவர்களுக்கு ஆத்ம வஸ்து தோன்றுது. உலகிலுள்ள உருவம், நிறம், பெயர் இவைதான் தோன்றும். தன்ஊனயும் நாமரூப முள்ள உலகப் பொருளில் ஒன்ருகவே எண்ணுவான். பிரபஞ்சத்திற்கு அதிஷ்டான மாயும் உண்மைப் பொருளாயுமுள்ள ப்ரஹ்மத்தை அறிந்தவனுக்கு எல்லாம் ப்ரஹ்மமாகத் தோன்றும். அதுமட்டுமல்ல, பரிபூர்ண சிதானந்த ஸ்வரூபமாகவே தன்ஊன நிஊனப்பான். **(40)**

**(அவதாரிகை)** ஆத்மஞானிக்கு உலகத் தோற்றம் மறைந்தாலும் ஆத்மாவை அறிந்துகொள்ளும்பொழுது நான் ஞாதா (அறிந்துகொள்கிறவன்), ஆத்மா ஞேயம் (அறியப்படும் பொருள்), ஞானம் (அறிவு) என்ற த்ரிபுடி (மூவகைப் பிரிவு) இருக்குமே! எவ்விதம் ஒன்ருக முடியும்? எனில் கூறுகிறுர்: -

**ज्ञातृज्ञानज्ञेयभेदः परे नात्मनि विद्यते ।**
**चिदानन्दैकरूपत्वात् दीव्यति स्वयमेव हि ॥ ४१ ॥**

**ஜ்ஞாத்ருஜ்ஞானஜ்ஞேயபே⁴த³: பரே நாத்மனி வித்³யதே ।**
**சிதா³னந்தை³கரூபத்வாத் தீ³வ்யதி ஸ்வயமேவ ஹி ॥ 41 ॥**

அறிகிறவன், அறிவு, அறியப்படும் பொருள் என்னும் வேற்றுமை பரமாத்மா வில் கிடையாது. அது ஞான ஆனந்த ஸ்வரூபமானதால் தானே பிரகாசிக்கிறது.

இம்மாதிரியான த்ரிபுடியும் ஆத்மாவில் உண்மையில் கிடையாது. அது ஆனந்தரூபம். அறிவே அதன் ஸ்வரூபம். ஸ்வயம்ப்ரகாச வஸ்து. ஆகையால் அது அறிவுக்கு ஆச்ரயமான ஞாதாவாகவும் ஆவதில்ஊ. அறிவுக்கு விஷயமான ஞேயமா கவும் ஆவதில்ஊ. அக்ஞான நிஊமையில் இந்த வேற்றுமை ஆத்மாவில் கல்பிக்க ப்பட்டது. ஞானிக்கு இதுவும் மறைந்து சுத்த ஞானவடிவாய் அவன் விளங்குகிறுன். **(41)**

**(அவதாரிகை)** இவ்வாறு பரிசுத்தமான ஆத்ம வஸ்துவை இடைவிடாது தியானம் செய்பவனுக்கு நேரும் பலஊனக் கூறுகிறுர்: -

**एवमात्मारणौ ध्यानमथने सततं कृते ।**
**उदिताऽवगतिज्वाला सर्वाज्ञानेन्धनं दहेत् ॥ ४२ ॥**

**ஏவமாத்மாரணௌ த்⁴யானமத²னே ஸததம் க்ருதே ।**
**உதி³தா(அ)வக³திஜ்வாலா ஸர்வாஜ்ஞானேந்த⁴னம் த³ஹேத் ॥ 42 ॥**

இவ்வாறு அந்தக்கரணமென்னும் அரணிக்கட்டையில் த்யானமென்ற கடை தலை எப்பொழுதும் இடைவிடாது செய்துவந்தால் அதிலிருந்து உண்டான ஆத்மஸா க்ஷாத்காரம் என்ற நெருப்பு ஜ்வாலை அக்ஞானமென்ற விறகை பொசுக்கி சாம்பலா க்கிவிடுகிறது.

நெருப்பைக் கடைந்து வெளிப்படுத்துவதற்காக ஆஹிதாக்னிகள் உபயோகிக் கும் கட்டைக்கு அரணிக்கட்டை என்று பெயர். ஒரு கட்டையின்மேல் மற்றொரு கட்டையை வைத்து இடைவிடாது கடைந்தால் அதிலிருந்து அக்னி உண்டாகும். அதுபோல மனதில் இடைவிடாது ஆத்ம த்யானம் செய்துவந்தால் ஆத்மஸாக்ஷாத் காரம் ஏற்படும். இது ஏற்பட்டவுடன் மூலாக்ஞானமும் அதன் கார்யங்களும் கொஞ்சம்கூட பாக்கியன்னியில் அழிந்துபோகும். இங்கு அவகதி என்பது சைதன்ய ப்ரதி பிம்பத்துடன் கூடிய ஆத்மாகார மனோவிருத்தி. அதாவது அகண்டாகார விருத்தி. ஆத்மஸ்வரூப பூதமான ஞானம் அக்ஞானத்தை அழிப்பதில்லை. அதற்கும் அக்ஞானத்திற்கும் விரோதம் கிடையாது அது அக்ஞானத்தை ப்ரகாசப்படுத்தும். இந்த சைதன்யமே ஆத்மாகார மனோவிருத்தியில் ப்ரதிபலித்தால் அந்த விருத்தி ஞானம் அக்ஞானத்தை அழித்துவிடுகிறது. விருத்தி ஞானமும் தானே அழிந்து விடுகிறது. ஸூரியனுடைய கிரணம் உஷ்ணத்தைக் கொடுத்தாலும் நேரிடையாக ஒன்றையும் கொளுத்துவதில்லை. அதே கிரணம் பூதக்கண்ணாடி வழியாக வந்தால் அதன் அடியிலிருக்கும் பொருளைக் கொளுத்தி விடுகிறது. **(42)**

**(அவதாரிகை)** அக்ஞானம் நீங்கிய பிறகு ஏற்படும் நிலைமையைக் கூறுகிறார்:-

**अरुणेनेव बोधेन पूर्वं संतमसे हृते ।**
**तत आविर्भवेदात्मा स्वयमेवांशुमानिव ॥ ४३ ॥**

**அருணேனேவ போ³தே⁴ன பூர்வம் ஸந்தமஸே ஹ்ருதே ।**
**தத ஆவிர்ப⁴வேதா³த்மா ஸ்வயமேவாம்ஶுமானிவ ॥ 43 ॥**

அருணன்போன்ற ஞானத்தால் முதலில் அக்ஞான மென்னும் இருட்டு அழிக் கப்பட்டதும் பிறகு ஸூரியன் போல தானாகவே ஆத்மா வெளிப்படுகிறார்.

காலையில் முதலில் அருணோதயம் ஏற்படுகிறது. அதனால் இருள் விலகுகி றது. பின்னால் ஸூரியன் தோன்றுகிறார். இதுபோல ஞானத்தால் அக்ஞானம் விலகுகிறது. பிறகு ஆத்மா தானாகவே பிரகாசிக்கிறார். ஆத்மா ஸ்வயம் பிரகாச வஸ்துவானதால் அதை வேறொன்றும் காட்டிக் கொடுப்பதில்லை. அக்ஞானம் விலக வேண்டியதுதான் தேவையாயிருந்தது. ஞானத்தால் அக்ஞானம் விலகினதும் ஆத்மா பிரகாசிக்கிறார். **(43)**

**(அவதாரிகை)** உலகில் ஸாதனங்களை அநுஷ்டித்து புதிதாக தன்னிடமில்லாத பலனை அடைவதுபோல ஆத்மஞானத்தால் புதிதாக தன்னிடமில்லாத ஆத்ம வஸ்து வை அடைகிறான் என்ற சிஷ்யன் எண்ணத்தைப் போக்குகிறார்: -

**आत्मा तु सततं प्राप्तोऽप्यप्राप्तवदविद्यया ।**
**तन्नाशे प्राप्तवद्भाति स्वकण्ठाभरणं यथा ॥ ४४ ॥**

**ஆத்மா து ஸததம் ப்ராப்தோ(அ)ப்யப்ராப்தவத³வித்³யயா ।**
**தந்நாஶே ப்ராப்தவத்³பா⁴தி ஸ்வகண்டா²ப⁴ரணம் யதா² ॥ 44 ॥**

ஆத்மா எப்பொழுதும் அடைந்த வஸ்துவாய் இருந்தாலும் அக்ஞானத்தால் அடையாததுபோல தோன்றுகிறது. அக்ஞானம் விலகினதும் தன் கழுத்திலுள்ள நகை போல அடைந்ததுபோல தோன்றுகிறது.

உலகில் நம்மிடமில்லாத் பொருள்களை (இவ்வுலகப் பொருள்களையோ மேலுலகப்பொருள்களையோ) கர்மாவை செய்து அடைகிறோம். பின்னொரு ஸமயம் நம்மைவிட்டு அவை பிரிந்துவிடுகின்றன. இது போலல்ல ஆத்ம ஸ்வரூபத்தை அடைவதென்பது. நாம் எப்பொழுதும் ஆத்மஸ்வரூபமாகவே இருப்பதால் அதை அடைகிறேன் என்று கூறுவது சரியல்ல. உண்மையில் நாம் ஆத்ம ஸ்வரூபமாயிரு ந்தும் அக்ஞானத்தால் தேஹாதிகளையே ஆத்மாவென எண்ணிக்கொண்டிருக்கிறோம். உண்மை ஆத்மஸ்வரூபம் நமக்கு விளங்காததால் அது கிடைக்காதது போல் தோன்றுகிறது. ஞானம் வந்ததும் ஆத்ம ஸ்வரூபம் நன்கு பிரகாசிக்கிறது. அப்பொழுது கிடைத்ததுபோல் தோன்றுகிறது. தன் கழுத்தில் போட்டுப்பார்த்துக் கொண்ட புதிய தங்கச்சங்கிலியைக் கழற்றிப் பெட்டியில் வைத்துவிட்டதாக எண்ணி பெட்டியில் காணுமல் வீடு முழுவதும் தேடி கெட்டுப்போய்விட்டதாக எண்ணி வருந்துகிறன். பிறகு நண்பனல் கழுத்தில் இருப்பதாக சுட்டிக் காட்டப்பட்டதும் கிடைத்துவிட்டதாக எண்ணி ஸந்தோஷமடைகிறான். இங்கு சங்கிலி முன்னலும் பின்னலும் கழுத்தில்தானிருக்கிறது. தொலைந்து விட்டதாக நினைத்ததும் கிடைத்து விட்டதாக எண்ணியதும் ப்ரமம் தான். இதுபோல்தான் ஆத்மஸ்வரூபத்தை அடைந் தது என்பது. ஞானத்தால் அக்ஞானம் விலகியதைத் தவிற வேறு ஒரு காரியமும் ஏற்படவில்லை. ஆகையால் ஸ்வஸ்வரூபத்தை அறிந்து ஆனந்தானுபவமுள்ள ஞானி மறுபடி ஸம்ஸார நிலையை அடைவதில்லை. **(44)**

**(அவதாரிகை)** பொய்யான ஜடபிரபஞ்சம் மறைந்துபோனலும் ஜீவாத்மா, பரமாத்மா என இருவகை சைதன்யமிருக்கும் பொழுது எல்லாம் ஒன்று என்ற அத்வைத நிலை எப்படி ஏற்படும்? ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றாக ஆக முடியாதே எனில் கூறுகிறர்: -

**स्थाणौ पुरुषवद्भ्रान्त्या कृता ब्रह्मणि जीवता ।**
**जीवस्य तात्त्विके रूपे तस्मिन् दृष्टे निवर्तते ॥ ४५ ॥**

**ஸ்தா²ணௌ புருஷவத்³ப்⁴ராந்த்யா க்ருதா ப்³ரஹ்மணி ஜீவதா ।**
**ஜீவஸ்ய தாத்விகே ரூபே தஸ்மின் த்³ருஷ்டே நிவர்ததே ॥ 45 ॥**

மரக்கட்டையில் புருஷனைப்போல ப்ரஹ்மத்தில் ஜீவத்தன்மை ப்ரமத்தால் ஏற்பட்டது. ஜீவனுடைய உண்மை ஸ்வரூபத்தைப் பார்த்ததும் அது விலகிவிடுகிறது.

இரவில் இருட்டில் மரக்கட்டையைப்பார்த்து திருடன் என எண்ணிப்பயந்து ஓடுகிறுன். அது போலவே அக்ஞானத்தால் ப்ரமத்தால் மனம் முதலான உபாதிகளுடன் ஸம்பந்தப்பட்டு ப்ரஹ்மமே ஜீவனுகத்தோன்றுகிறது. ப்ரஹ்மஸ்வரூபத்தைக் காட்டிலும் தனியாக ஜீவன் என்பது கிடையாது. ப்ரஹ்மமே மாயிகமான உபாதிகளுடன் ஸம்பந்தப்பட்டு ஜீவன் என்ற பெயரை அடைகிறது. மரக்கட்டையைக் காட்டிலும் திருடன் தனியாக இருக்கிறுனு? ப்ராந்தனுக்கு மரக்கட்டையே திருடனுகத்தோன்றுகிறது. விளக்கை எடுத்துவந்து நன்கு கவனித்துப்பார்த்தோமாஞல் மரக்கட்டைதான் தெரிகிறது. திருடன் தெரிவதில்ஜல. ப்ரமத்தால் திருடனுக எண்ணிக்கொண்டதைத் தவிற உண்மையில் திருடன் வரவுமில்ஜல, போகவுமில்ஜல. அது போல குருமுகமாக சாஸ்திரங்கஜள விசாரித்து உபாதிகஜள விலக்கி ஜீவனுடைய உண்மை ஸ்வரூபத்தை அறிந்தவனுக்கு ஜீவஸ்வரூபம் மறைந்து ப்ரஹ்ம ஸ்வரூபம்தான் தெரியும். நான் ப்ரஹ்மம் என்ற அனுபவமேற்படும். உண்மையில் ஜீவனும் ப்ரஹ்மமும் இரண்டு தனித்தனியான வஸ்துவாக இருக்குமாஞல் இரண்டும் ஒன்றுகாது. அக்ஞானத்தால் ப்ரஹ்மமே ஜீவனுகத் தோன்றுவதால் அக்ஞானம் விலகியதும் ப்ரஹ்மம்தான் தெரிகிறது. ஜீவஸ்வரூபம் மறைந்து விடுகிறது. **(45)**

**(அவதாரிகை)** தேஹாதிகளில் நான், என்னுடையது என்ற எண்ணம் வேறூன்றியிருக்கும்பொழுது நான் இவையல்ல என்ற ஞானம் எப்படியேற்படும் என்ற கேள்விக்கு அதுவும் பொய் என்று பதில் கூறுகிறுர்: -

**तत्वस्वरूपानुभवादुत्पन्नं ज्ञानमञ्जसा ।**
**अहं ममेति चाज्ञानं बाधते दिग्भ्रमं यथा ॥ ४६ ॥**

**தத்வஸ்வரூபானுப⁴வாது³த்பன்னம் ஜ்ஞானமஞ்ஜஸா ।**
**அஹம் மமேதி சாஜ்ஞானம் பா³த⁴தே தி³க்³ப்⁴ரமம் யதா² ॥ 46 ॥**

உண்மை ஸ்வரூபத்தின் அனுபவத்தாலேற்பட்ட ஞானம் திசை மோஹத்தைப்போல நான், என்னுடையது என்ற அக்ஞானத்தைப்போக்குகிறது.

உண்மை ஸ்வரூபத்தை அறிந்துகொள்ளும் வரைதான் தேஹாதிகளில் நான் என்றும், அதைச்சேர்ந்தவைகளிடம் என்னுடையது என்றும் எண்ணம் ஏற்படுகிறது. ப்ரஹ்ம சைதன்யத்தைத் தன்ஜனக்காட்டிலும் வேறுகவும் நிஜனக்கிறுன். ஜீவஜனயும் ப்ரஹ்மத்தையும் பிரித்துக்காட்டும் உபாதிகஜள விலக்கி ஒரே சைதன்ய ஸ்வரூபத்தை அறிந்ததும், அக்ஞானம் நீங்கிவிடுகிறது. நான் ப்ரஹ்மம் என்ற ஞானம் ஏற்பட்டுவிட்டதால் அதன்பிறகு தேஹாதிகளில் நான் என்றே, அதைச் சேர்ந்தவைகளிடம் என்னுடையது என்றே எண்ணம் ஏற்படுவதில்ஜல பலதடவை திசைகஜள அறிந்தபோதிலும் மறுபடியும் மறுபடியும் திக்ப்ரமம் ஏற்படும். ப்ரஹ்ம ஞானம் வந்தவுடன் அது நீங்கிவிடும்.

(**அவதாரிகை**) ஞானி பிரபஞ்சத்தை 'நான், எனது' என்ற எண்ணத்துடன் பார்க்காவிட்டாலும் தன்னைக்காட்டிலும் வேறாக பார்ப்பானல்லவா எனில், இல்லையெனக்கூறுகிறார்: -

**सम्यग्विज्ञानवान् योगी स्वात्मन्येवाखिलं स्थितम् ।**
**एकं च सर्वमात्मानमीक्षते ज्ञानचक्षुषा ॥ ४७ ॥**

**ஸம்யக்³விஜ்ஞானவான் யோகீ³ ஸ்வாத்மன்யேவாகி²லம் ஸ்தி²தம் ।**
**ஏகம் ச ஸர்வமாத்மானமீக்ஷதே ஜ்ஞானசக்ஷுஷா ॥ 47 ॥**

எல்லா பிரபஞ்சமும் தன்னிடத்திலேயே இருப்பதாக நன்கு அறிந்துகொண்ட ஞானி ஞானக்கண்ணால் எல்லாவற்றையும் ஒரே ஆத்மஸ்வரூபமாக பார்ப்பான்.

எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாக உள்ள ப்ரஹ்மத்தை அறியாதவரைதான் பிரபஞ்சம் வேறாகத் தோன்றிக்கொண்டிருக்கும். அதிஷ்டானமான ப்ரஹ்மத்தை நேரில் அறிந்த ஞானிக்கு பிரபஞ்சம் வேறாகத் தோன்றாது. அவன் தன் திவ்ய ஞானத்தால் எல்லாவற்றையும் ஒரே ஆத்ம வஸ்துவாகப் பார்ப்பான். நமக்கு பிரபஞ்சமாகத் தோன்றுவதெல்லாம் அவனுக்கு ப்ரஹ்மமாகத் தோன்றும். நமக்கு உண்மையான ப்ரஹ்மம் தெரிவதில்லை. பொய்யான பிரபஞ்சம்தான் தோன்றுகிறது. ஞானிக்கு உண்மையான ப்ரஹ்மம் தெரியும். பொய்யான பிரபஞ்சம் தோன்றாது. **(47)**

(**அவதாரிகை**) பலவிதமாகக் காணப்படும் பிரபஞ்சத்தை ஒரே ஆத்ம வஸ்துவாக எப்படிப் பார்க்கமுடியும்? எனில் கூறுகிறார்: -

**आत्मैवेदं जगत्सर्वं आत्मनोऽन्यन्न किंचन ।**
**मृदो घटादीति स्वात्मानं सर्वमीक्षते ॥ ४८ ॥**

**ஆத்மைவேத³ம் ஜக³த்ஸர்வம் ஆத்மனோ(அ)ன்யன்ன கிஞ்சன ।**
**ம்ருதோ³ க⁴டாதீ³தி ஸ்வாத்மானம் ஸர்வமீக்ஷதே ॥ 48 ॥**

இந்த உலகம் முழுவதும் ஆத்மஸ்வரூபம்தான். ஆத்மாவைத் தவிர வேறொன்றும் இல்லை. மண்ணைக் காட்டிலும் குடம் வேறாக இல்லை. ஆகையால் எல்லாவற்றையும் தன் ஆத்மஸ்வரூபமாகப் பார்க்கிறான்.

குயவன் மண்ணால் குடத்தைச் செய்கிறான். இங்கு குடம் என்பது மண்ணைக் காட்டிலும் வேறான பொருளா? மண் குடம் என்று இரண்டு பொருள்கள் இருக்கின்றனவா? இல்லை. முன்னாலும் மண்தான், இப்பொழுதும் மண்தான் பின்னாலும் மண்தான். குடத்திலிருந்து மண்ணை நீக்கி விட்டோமானால் குடம் மிஞ்சி நிற்பதில்லை. முன்னால் மண்ணாகமட்டும் இருந்தது. இப்பொழுது உருவமும் குடம் என்ற பெயரும் குயவனால் ஏற்பட்டிருக்கிறது. இந்த இரண்டும் வாஸ்தவமல்ல. அங்கு எப்பொழுதும் இருக்கும் பொருள் மண்தான். இதேபோல எல்லாக்காலங்களிலும் இருக்கும் பொருள் ஒரே ஆத்ம வஸ்துதான். அதில் பிரபஞ்ச உருவங்களும்

பிரபஞ்சப் பெயர்களும் அத்யாஸத்தால் ஏற்பட்டிருக்கின்றன. இந்த நாம ரூபங்கள் உண்மையல்ல. பலவிதமான பிரபஞ்சம் உண்மையாக இருக்குமாஞல் அவைகளே ஒரே ஆத்ம வஸ்துவாக பார்க்க முடியாது. அது உண்மையல்ல. பொய்யான நாம் ரூப பிரபஞ்சம் மறைந்து ஒரே ஆத்ம வஸ்துதான் ஞானிக்குத் தெரிகிறது. நாஞவித மாகவும் வேருகவும் இதுவரை தோன்றிக்கொண்டிருந்த பிரபஞ்சத்தை ப்ரஹ்மமாக பார்க்கிறுன். இப்பொழுது அப்பிரபஞ்சம் அவனுக்குத் தெரிவதில்ஜல. ஆதலால் ஞானி ஒரே ஆத்மஸ்வருபத்தைப் பார்க்கிறுன் என்று சொன்னது பொருத்தமானதே. **(48)**

**(அவதாரிகை)** நான்கு சுலோகங்களால் ஜீவன் முக்தனுடைய நிஜலயை வர்ணிக்கிறுர்: -

## जीवन्मुक्तस्तु तद्विद्वान् पूर्वोपाधिगुणांस्त्यजेत् ।
## सच्चिदानन्दरूपत्वात् भवेत् भ्रमरकीटवत् ॥ ४९ ॥

**ஜீவன்முக்தஸ்து தத்3வித்3வான் பூர்வோபாதி4கு3ணும்ஸ்த்யஜேத் ।**
**ஸச்சிதா3னந்த3ரூபத்வாத் ப4வேத் ப்4ரமரகீடவத் ॥ 49 ॥**

அந்த ப்ரஹ்மத்தை அறிந்துகொண்ட ஜீவன்முக்தன் முன் உபாதிகளான சரீரம், மனம், புத்தி இவைகளேயும், ஸத்வாதி குணங்களேயும் விலக்கிவிடுவான். வண்டால் கொட்டப்பட்ட புழுபோல ஸச்சிதானந்த ரூபமான ப்ரஹ்மமாக ஆய்விடு வான்.

ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரமடைந்த பிறகு ஆனந்தானுபவத்துடன் விளங்கும் ஞானி ஜீவன்முக்தன் எனப்படுவான். சில ஸமயம் அவனுக்கு பழய வாஸனையி ஞல் தேஹம், இந்திரியம் முதலான உபாதிகள் தோன்ற ஆரம்பித்தாலும், அவை களேயெல்லாம் விலக்கி ஸச்சிதானந்த ரூபமான ப்ரஹ்மத்தையே எப்பொழுதும் அநுஸந்தானம் செய்வான். வண்டானது சிறிய புழுவை தன் கூட்டில் கொண்டுவந்து அதை அடிக்கடி கொட்டும். தன்ஜனக் கொட்டவரும் வண்டை நிஜனத்து நிஜனத்து அந்த பலத்தால் கடைசியில் புழுவே வண்டாக மாறிவிடுகிறது. அதுபோல ஜீவன் முக்தன் ஸச்சிதானந்த ப்ரஹ்மாநுஸந்தான பலத்தால் கடைசியில் ப்ரஹ்மமாக ஆகிவிடுகிறுன்.

## तीर्त्वा मोहार्णवं हत्वा रागद्वेषादिराक्षसान् ।
## योगी शान्तिसमायुक्त आत्मारामो विराजते ॥ ५० ॥

**தீர்த்வா மோஹார்ணவம் ஹத்வா ராக3த்3வேஷாதி3ராக்ஷஸான் ।**
**யோகீ3 ஶாந்திஸமாயுக்த ஆத்மாராமோ விராஜதே ॥ 50 ॥**

மோஹமென்னும் கடஜலக் கடந்து ராகம், த்வேஷம் முதலான அரக்கர்களேக் கொன்று, ஞானி சாந்தியுடன் கூடி ஆத்மாவிலேயே இன்பமடைபவஞக விளங்கு கிறுன்.

இந்த சுலோகத்தில் ஸ்ரீசங்கரபகவத்பாதர் ஸ்ரீ ராமாயண கதையைக் காட்டியிருக்கிறார். தண்டகாரண்யத்தில் ராமன் ஸீதையுடன் வஸிக்கும்பொழுது ராவணன் என்னும் அரக்கன் ராமனிடமிருந்து ஸீதையைப் பிரித்து அவளை ஸமுத்திரத்தின் நடுவிலுள்ள லங்கைக்கு எடுத்துச்சென்று அங்கே அசோக வனத்தில் வைத்து அநேக அரக்கர்களையும் காவல் வைத்துவிட்டான். ஸீதையைப் பிரிந்த ராமர் அவளைக் காணாமல் தவித்துப் பிறகு அவளிருக்குமிடமறிந்து ஸமுத்ரம் தாண்டி லங்கை சென்று ராவணனையும் மற்றுமுள்ள அரக்கர்களையும் கொன்று மறுபடியும் ஸீதையையடைந்து அயோத்தியில் பட்டாபிஷேகம் செய்துகொண்டு ஸீதாராமனாக விளங்கினார். அது போல் ராகம், த்வேஷம் முதலான அரக்கர்கள் ஜீவன் என்னும் ராமனிடமிருந்து சாந்தி என்னும் ஸீதையைப் பிரித்து எடுத்துச்சென்று மோஹமென்னும் ஸமுத்ரத்தின் நடுவில் சிறையில் வைத்துவிட்டனர். அதாவது எங்கும் நிறைந்த ஆனந்த ரூபமான ப்ரஹ்மம் என்னும் மெய்ப் பொருளை நாம் அறிந்து கொள்ளவில்லை. இந்த அக்ஞானத்தால் பொய்யாயிருந்தாலும் பலவிதமாகத் தோன்றும் பிரபஞ்சத்தை உண்மையென எண்ணி, ஒன்றில் விருப்பும் மற்றொன்றில் வெறுப்பும் கொள்கிறோம். விரும்பிய பொருளை அடையவும் வெறுப்புள்ள பொருள்களை விலக்கவும் முயற்சித்து, எண்ணியபடி காரியம் நிறைவேறாமல், பலவித துன்பங்களை அனுபவிக்கிறோம். இவ்வாறு சாந்தியை இழந்து ஸ்வரூபானந்தத்தை அநுபவிக்க முடியாமல் தவிக்கிறோம். இந்த நிலையில் தீர புருஷனொருவன் குருவின் உபதேசத்தால் ப்ரஹ்மஞானத்தை அடைந்ததும் அவனுக்கு அக்ஞானம் விலகிவிடுகிறது. பேதஞானம் நீங்கி எல்லாவற்றையும் ஒரே ப்ரஹ்மவஸ்துவாக பார்ப்பதால் ராகத்வேஷங்களும் விலகி சாந்தி அடைந்து ஆத்மானந்தத்தை அனுபவிக்கிறான். **(50)**

**बाह्यानित्यसुखासक्तिं हित्वाऽऽत्मसुखनिर्वृतः ।**
**घटस्थदीपवच्छश्वदन्तरेव प्रकाशते ॥ ५१ ॥**

**பா³ஹ்யாநித்யஸுகா²ஸக்திம் ஹித்வா(ஆ)த்மஸுக²நிர்வ்ருத: ।**
**க⁴டஸ்த²தீ³பவச்ச²ஶ்வத³ந்தரேவ ப்ரகாஶதே ॥ 51 ॥**

வெளியிலுள்ள பொருள்களாலுண்டாகும் அநித்யமான விஷயஸுகத்தில் ஈடுபடாமல் ஆத்ம ஸுகத்திலேயே திருப்தியுள்ளவனாக குடத்திற்குள்ளிருக்கும் விளக்கு போல் எப்பொழுதும் உள்ளுக்குள்ளேயே பிரகாசித்துக்கொண்டு இருக்கிறான்.

நம் ஆத்மா எல்லையற்ற சாச்வதமான ஆனந்த ஸ்வரூபமாக இருந்த போதிலும், அக்ஞானத்தால் மூடியிருப்பதால் அந்த ஆனந்தத்தை நாம் அநுபவிக்க முடிவதில்லை. அதற்காக வெளியிலுள்ள விஷயங்களைத்தேடி அலைகிறோம். விஷயங்களால் கிடைக்கும் ஸுகம் விரைவில் அழிந்துபோகக்கூடியது. அதுவும் ஸ்வல்பம் தான். ஞானிக்கு அக்ஞானம் விலகி ஸ்வரூபானந்தம் பிரகாசிப்பதால் அதிலேயே திருப்தியுள்ளவனாகி விஷயஸுகத்தில் ஆசை வைப்பதில்லை. விஷயங்களைத் தேடி அலைவதுமில்லை. ஜீவன்முக்தனுடைய ஞானானுபவத்தை நாம் அறிந்து கொள்ள முடியாது. குடத்திற்குள் எரிந்துகொண்டிருக்கும் தீபத்தின் ஒளியானது வெளியே தெரியாவிட்டாலும் உள்ளே பிரகாசித்துக்கொண்டிருக்கும். அதுபோல ஞானியின்

அனுபவம் வெளியே தெரியாவிட்டாலும் அவனுக்கு உள்ளே பிரகாசித்துக் கொண்டிருக்கும். **(51)**

## उपाधिस्थोऽपि तद्धर्मैर्न लिप्तो व्योमवन्मुनिः ।
## सर्वविन्मूढवत्तिष्ठेदसक्तो वायुवच्चरेत् ॥ ५२ ॥

**உபாதி4ஸ்தோ2(அ)பி தத்3த4மைர்ன லிப்தோ வ்யோமவன்முனிः ।**
**ஸர்வவின்மூட4வத்திஷ்டே2த்3ஸக்தோ வாயுவச்சரேத் ॥ 52 ॥**

ஞானியானவன் உபாதிகளுடன்கூட இருந்த போதிலும் ஆகாசத்தில்போல அவனிடம் அவைகளின் தர்மங்கள் ஒட்டாது. அவன் எல்லாமறிந்தபோதிலும் மூடன் போலிருப்பான். ஒன்றிலும் ஈடுபடாமல் காற்றுப் போல ஸஞ்சரிப்பான்..

ப்ரஹ்மஸாக்ஷாத்காரமடைந்த ஞானிக்கும் நம்மைப் போலவே சரீரம், இந்திரியம், மனம் முதலியவைகள் இருக்கும். ஞானத்தால் ஸஞ்சிதமான எல்லாக் கர்மாக்களும் நசித்துப்போய்விடும். சரீராதிகளில் நான் என்ற எண்ணம் இல்லாத தால் இனிமேல் செய்யும் கர்மாக்களும் அவனிடம் பலனைக்கொடுக்காது. ஆனுல் இந்த சரீரத்தைக் கொடுத்திருக்கும் பிராரப்தகர்மா ஒன்று மட்டும் பலனைக்கொடுக்க ஆரம்பித்துவிட்டதால் ஞானத்தால் நீங்காது. அதை மட்டும் ஞானியும் அனுபவித்துத் தான் போக்கவேண்டும். வில்லில் பூட்டிய அம்பை வெளியில் விடுவதற்கு முன்னுல் நிறுத்திக்கொள்ளலாம். லக்ஷ்யத்தை நோக்கி வெளியில் விட்டபிறகு அதை நிறுத்த முடியாது வேகத்துக்குத் தகுந்த தூரம் போய்த்தான் நிற்கும். அதுபோல பலனைக் கொடுக்க ஆரம்பித்த ப்ராரப்த கர்மாவும் பலனைக்கொடுத்த பிறகுதான் போகும். ப்ராரப்தகர்மாதீனமாக ஏற்பட்ட சரீரம், இந்திரியம், மனம் முதலிய உபாதிகளுடன் ஞானி வியவஹாரம் செய்தபோதிலும் அவைகள் செய்யும் காரியங்கள் ஒன்றும் ஞானியிடம் ஒட்டாது. ஆகாசத்தில் ஏதாவது ஒட்டுகிறதா? மேலும் ப்ரஹ்ம ஞானி எல்லாம் அறிந்தவனுயிருந்தபோதிலும் உலக வியவஹாரங்களில் வெளிப்பார் வைக்கு மூடன் போல் இருப்பான். எங்கும் ஸஞ்சாரம் செய்தபோதிலும் ஒன்றிலும் பற்றுதல் இருக்காது. **(52)**

**(அவதாரிகை)** ப்ராரப்தகர்மா முடிந்தபிறகு ஏற்படும் விதேஹ முக்தியைக் கூறுகிறுர்: -

## उपाधिविलयाद्विष्णौ निर्विशेषं विशेन्मुनिः ।
## जले जलं वियद्व्योनि तेजस्तेजसि वा यथा ॥ ५३ ॥

**உபாதி4விலயாத்3விஷ்ணௌ நிர்விஶேஷம் விஶேன்முனிः ।**
**ஜலே ஜலம் வியத்3வயோனி தேஜஸ்தேஜஸி வா யதா2 ॥ 53 ॥**

உபாதி நீங்கியதும் ஞானி, நீரில் நீர்போலவும், ஆகாயத்தில் ஆகாயம் போலவும், தேஜஸில் தேஜஸ் போலவும் எங்கும் நிறைந்த ப்ரஹமத்தில் வேற்று மையன்னியில் ஒன்றுகக் கலந்துவிடுகிறுன்.

பிராரப்தகர்மா நீங்கியதும் ஸ்தூலம் ஸூக்ஷ்மம், என்னும் இருவித சரீரங்களும் அதனதன் காரணமான மஹா பூதங்களில் கலந்துவிடுகின்றன. ப்ரஹ்மத்தைக் காட்டிலும் ஜீவனை வேறுகப்பிரித்துக்காட்டிய உபாதிகளெல்லாம் நீங்கியதும் ஜீவன், ப்ரஹ்மம் இரண்டுமே ஒரே சுத்த சைதன்ய ஸ்வரூபமாக பிரகாசிக்கிறது. சிறிதும் அதில் வேற்றுமையைக் காணமுடியாது. சுத்தமான கங்கா ஜலம் தனியாக சிறு பாத்திரத்திலிருந்ததை கங்கை நீருடன் கலந்துவிட்ட பிறகு அதில் வேற்றுமை காணமுடியுமா? சிறு குடத்தில் உள்ள கடாகாசம் குடமுடைந்ததும் மஹாகாசத்துடன் கலந்துவிடுகிறது. சிறு நெருப்பைப் பெரிய நெருப்புடன் சேர்த்துவிட்டால் ஒன்று சேர்ந்துவிடுகிறது. இதுபோல உபாதி நீங்கியதும் ஜீவஸ்வரூபம் தனியாயிருக்க முடியாமல் ப்ரஹ்மத்துடன் ஒன்றுகக் கலந்துவிடுகிறது. ஜீவனுக்கும் ப்ரஹ்மத்துக்கும் சிறிதும் வேற்றுமை கிடையாது என்பதை காட்ட மூன்று திருஷ்டாந்தங்கள். அதிலும் ஆகாச த்ருஷ்டாந்தத்தால் தத்வம் ஒன்றுதான்; உபாதிகள் தான் வேறு, உபாதி பேதத்தால் தத்வமும் வேறுக தோன்றிக் கொண்டிருந்தது, உபாதி நீங்கியதும் தோற்றமும் மறைந்துவிடுகிறது என்ற விஷயத்தைக் காட்டுகிறுர். உபநிஷத்துக்களிலும்,

**'यथोदकं शुद्धे शुद्धमासिक्तं तादृगेव भवति' (कठोपनिषत् ४ - १५)**

'யதோ²த³கம் ஶுத்³தே⁴ ஶுத்³த⁴மாஸிக்தம் தாத்³ருகே³வ ப⁴வதி'

(கடோ²பநிஷத் 4 - 15)

**'यथा नद्यः स्यन्दमानाः समुद्रे अस्तं गच्छन्ति नामरूपे विहाय ॥'**

'யதா² நத்³ய: ஸ்யந்த³மாஞ: ஸமுத்³ரே அஸ்தம் க³ச்ச²ந்தி நாமரூபே விஹாய ॥'

- (மு. 3-2-8.)

என்று திருஷ்டாந்தம் கூறப்பட்டிருக்கிறது.

**(அவதாரிகை)** பல சுலோகங்களால் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை அநேக ப்ரகாரமாக விவரிக்கிறார்: -

**यल्लाभात् नापरो लाभो यत्सुखात्नापरं सुखम् ।**
**यत्ज्ञात्नापरं ज्ञानं तद् ब्रह्मेत्यवधारयेत् ॥ ५४ ॥**

**யல்லாபா⁴த் நாபரோ லாபோ⁴ யத்ஸுகா²த்ஞபரம் ஸுக²ம் ।**
**யத்ஜ்ஞாத்ஞபரம் ஜ்ஞானம் தத்³ ப்³ரஹ்மேத்யவதா⁴ரயேத் ॥ 54 ॥**

எந்த வஸ்துவை அடைவதை விட வேறு உயர்ந்த லாபம் கிடையாதோ, எந்த ஸுகத்தைக்காட்டிலும் வேறு உயர்ந்த ஸுகம் கிடையாதோ, எதை அறிவதைக்காட்டிலும் உயர்ந்த ஞானம் வேறு கிடையாதோ அதை ப்ரஹ்மம் என்று தீர்மானித்துக் கொள்ளவேண்டும்.

நாம் ஸுகத்தை விரும்பி அதற்கு ஸாதனமான பொருள்களை அடைய முயற்சிக்கிறேம். எத்தனை பொருள்களையடைந்தபோதிலும் இதைவிடச் சிறந்த அடைய வேண்டிய பொருள்கள் பாக்கி ஏராளமாக இருக்கின்றன. ஒரு மனிதனுவது உலகிலு

ள்ள எல்லாச் சிறந்த பொருள்களேயும் அடைந்துவிட்டதாகக் கூற முடியாது. இவ்வுலகிலுள்ள எல்லாப் பொருள்களேயும் ஒருவன் அடைந்தபோதிலும், ஸ்வர்க்க த்திலும் ப்ரஹ்மலோகத்திலும் அடையவேண்டிய பொருள்கள் எத்தனேயோ இருக்கி ன்றன. ஆகவே ஆத்ம வஸ்துவை ஒருவன் அடைந்துவிட்டால் இனிமேல் அடைய வேண்டிய சிறந்த பொருள் அவனுக்கு வேறென்றுமில்லே. ஆத்ம லாபம்தான் உயர்ந்தது.

**आत्मलाभात् न परं विद्यते**

**ஆத்மலாபா⁴த் ந பரம் வித்³யதே**

என்று ஆபஸ்தம்பர் தர்ம ஸூத்திரத்தில் அத்யாத்ம படலத்தில் கூறுகிறர். ஆத்மலாபம் உயர்ந்தது என்பதற்குக் காரணம் அது உயர்ந்த ஸுகரூபம். ஸுகத்தைத் தருவதால் உலகப்பொருள்களே வேண்டுகிறேம். அந்த ஸுகத்திலுள்ள தாரதம்யத் தைக்கொண்டு அதைத் தரும் பொருள்களேயும் உயர்ந்தது தாழ்ந்தது என்று பிரிக்கிறேம். ஆத்மாவோ எல்லாவற்றையும்விட உயர்ந்த ஸுக ஸ்வரூபம். ஆகை யால் ஆத்மலாபம் சிறந்தது. மேலும் உலகப்பொருள்களே அடைவதிலும் அதிலிரு ந்து ஸுகத்தைப் பெறுவதிலும் பல கஷ்டங்கள் உண்டு. கஷ்டப்பட்டு கிடைக்கும் ஸுகமும் ஸ்திரமல்ல. ஆத்மாவை அடைய அதை அறிவதைத் தவிற வேறு ஒரு காரியமும் தேவை இல்லே. உடனே ஸுகமும் விளங்கும், ப்ரஹ்மஞானத்தைக் காட்டிலும் சிறந்த ஞானம் வேறு இல்லே. உலகில் நாம் அறியவேண்டியது எவ்வளவோ இருந்தபோதிலும் அவைகளெல்லாவற்றையும்விட ப்ரஹ்மம்தான் உயர்ந்தது. ப்ரஹ்மத்தை அறிந்தவன்தான் ஸர்வக்ஞன் எனப்படுவான். அதை அறியாமல் வேறு எந்தப் பொருளே அறிந்தபோதிலும் அவனே ஸர்வக்ஞன் எனச் சொல்லமுடியாது. அதனுல் ப்ரஹ்மஞானமே உயர்ந்தது. இவ்வாறு ஆத்மலாபம், ஆத்மஸுகம், ஆத்மஞானம் இம்மூன்றையும் உயர்ந்ததாகக் கூறி, ஆத்ம ஞானமே ஆத்மலாபமென்றும், அது நிரதிசய ஸுகரூபம் என்றும் காட்டினார். **(54)**

**यद् दृष्ट्वा नापरं दृश्यं यद्भूत्वा न पुनर्भवः ।**
**यज्ज्ञात्वा नापरं ज्ञेयं तद् ब्रह्मेत्यवधारयेत् ॥ ५५ ॥**

**யத்³ த்³ருஷ்ட்வா நாபரம் த்³ருஶ்யம் யத்³பூ⁴த்வா ந புனர்ப⁴வ: ।**
**யத்ஜ்ஞாத்வா நாபரம் ஜ்ஞேயம் தத்³ ப்³ரஹ்மேத்யவதா⁴ரயேத் ॥ 55 ॥**

எதைப் பார்த்து (விட்டால்) பார்க்க வேண்டியது வேறு இல்லேயோ, எதாக ஆகிவிட்டால் மறுபடியும் பிறப்பு இல்லேயோ, எதை அறிந்து அறியவேண்டியது வேறு இல்லேயோ அதை ப்ரஹ்மம் என்று தீர்மானிக்கவேண்டும்.

முன் சுலோகத்தில் ஆத்மலாபமும், ஆத்மஞானமும் உயர்ந்தது என்று கூறப்பட்டது. இந்த சுலோகத்தில் ஆத்மாவை அறிந்து அடைந்தபிறகு அறியவேண்டி யதோ, அடையவேண்டியதோ வேறென்றும் இல்லே என்பதைக் கூறுகிறர். ஆத்மா வை நேரில் பார்த்த பிறகு பார்க்க வேண்டிய பொருள் உலகில் ஒன்றும் இல்லே.

பார்க்க வேண்டிய பொருள் வேறு இல்லாவிட்டாலும் கேட்க வேண்டிய பொருள், மனதால் அறியவேண்டிய பொருள் வேறு இருக்கும் என்று ஸந்தேஹம் வரலாம். அதற்காக 'யத்ஞாத்வா நாபரம் ஞேயம்' என்று ப்ரஹ்மத்தை அறிந்த பிறகு இந்திரிய ங்களாலோ, மனதாலோ அறியவேண்டியது வேறு ஒன்றுமில்லையெனக் கூறுகிறர். காரணத்தைக்காட்டிலும் காரியம் வேறில்லை என்ற நியாயப்படி எல்லாவற்றிற்கும் காரணமான ப்ரஹ்மத்தைக்காட்டிலும் பிரபஞ்சம் வேறில்லை. ப்ரஹ்மத்தை நேரில் பார்த்து அறிந்த ஞானிக்கு எல்லாம் ப்ரஹ்மமாகவே தோன்றும். ஆகையால் அவனுக்கு அறியவேண்டியதோ, பார்க்கவேண்டியதோ பொருள் ஒன்றுமில்லை. ப்ரஹ்மலோகம்வரை எங்கு சென்றுலும் திரும்பிவரவேண்டியதுதான். ஆனுல் ப்ரஹ்மத்தை அடைந்தவன் ப்ரஹ்மஸ்வரூபமாகவே ஆகி விடுகிறபடியால் மறுபடியும் அந்த நிலையிலிருந்து மாறுவதில்லை. அவனுக்கு மறுபடியும் பிறப்புக் கிடையாது. சரீரத்தை எடுப்பதில்லை. ஆகையால் ஆத்மலாபம் உயர்ந்தது. இதை கீதையில் பகவான்,

**'आब्रह्मभुवनाल्लोकाः पुनरावर्तिनोऽर्जुन ।**
**मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते' ॥ गी. ८-१६**

**'ஆப்³ரஹ்மபு⁴வனுல்லோகா: புனராவர்திஞே(அ)ர்ஜுன ।**
**மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்³யதே' ॥ கீ³। 8-16**

என்று கூறுகிறர்.

**(அவதாரிகை)** எல்லாம் ப்ரஹ்மஸ்வரூபம் என்பதைக் காட்டுகிறர்: -

**तिर्यगूर्ध्वमधः पूर्णं सच्चिदानन्दमद्वयम् ।**
**अनन्तं नित्यमेकं यत् तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ५६ ॥**

**திர்யகூ³ர்த்⁴வமத⁴: பூர்ணம் ஸச்சிதா³னந்த³மத்³வயம் ।**
**அனந்தம் நித்யமேகம் யத் தத்³ப்³ரஹ்மேத்யவதா⁴ரயேத் ॥ 56 ॥**

குறுக்கிலும் (பக்கங்களிலும்), மேலும், கீழும் (எங்கும்) நிறைந்திருப்பது, ஸச்சிதானந்த ஸ்வரூபம்; இரண்டற்றது; (தேசத்தாலோ, காலத்தாலோ, வஸ்துவா லோ) வரம்பில்லாதது; அழிவற்றது, ஒன்று; அதுதான் ப்ரஹ்மம்.

பிரஹ்மம் முக்காலத்திலும் மாறுத ஞான ஆனந்த வடிவமானது. எல்லா தேசங்களிலும் நிறைந்திருப்பது. எல்லா தேசத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லாப் பொருளாகவும் இருப்பதால் தேசத்தாலோ, காலத்தாலோ. வுஸ்துவாலோ அதற்கு வரம்பு கிடையாது. முடிவும் கிடையாது. அதுமாதிரியாகவோ, விஜாதீயமாகவோ வேறு பொருள் கிடையாது. **(56)**

**अतद्व्यावृत्तिरूपेण वेदान्तैर्लक्ष्यतेऽव्ययम् ।**
**अखण्डानन्दमेकं यत् तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ५७ ॥**

**அதத்³வ்யாவ்ருத்திரூபேண வேதா³ந்தைர்லக்ஷ்யதே(அ)வ்யயம் ।**
**அக²ண்டா³னந்த³மேகம் யத் தத்³ப்³ரஹ்மேத்யவதா⁴ரயேத் ॥ 57 ॥**

இதுவல்ல, இதுவல்ல என்னும் ரீதியில் உபநிஷத்துக்களால் அறிவுறுத்தப் படுவது; குறைவற்றது, பிரிக்கமுடியாத ஆனந்தவடிவமான ஒரே தத்துவம்தான் ப்ரஹ்மம்.

இதுவரை ப்ரஹ்மஸ்வரூபத்தை ஒருவாறு சிறிது விளக்கிக்காட்டினோம். ஆனால் உள்ளது உள்ளபடி அதன் தத்வத்தை முழுவதும் உபதேசிக்கமுடியாது. சப்தத்தால் தான் பிறருக்கு உபதேசிக்கவேண்டும். ப்ரஹ்மமோ சப்தத்திற்கு எட்டாதது. ஜாதி, குணம், க்ரியை ஸம்கிஞை இந்த தர்மங்களுள்ள பொருளைத்தான் சப்தம் காட்டும். ப்ரஹ்மத்திலோ ஒரு தர்மமும் கிடையாது. அகண்டமான வஸ்து. ஆகையால்தான் ப்ரஹ்மத்தை உபதேசிப்பதற்காக ஏற்பட்ட உபநிஷத்துக்கள் பலவாறாக ப்ரஹ்மஸ்வரூபத்தை நிரூபணம் செய்தும் திருப்தியடையாமல் கடைசியில் நிஷேதமுகமாக வர்ணிக்கிறது. அதாவது **नेति नेति** (**நேதி நேதி**), **अशब्दमस्पर्शं** (**அஶப்³த³மஸ்பர்ஶம்**) என்று உலகில் தோன்றும் பொருள்களெல்லாம் பிரஹ்மமில்லை என்று உபதேசிக்கிறது. நம்மைக்காட்டிலும் வேறான, நம்மால் அறியப்படுகின்ற பொருள் ப்ரஹ்மமல்ல என்று ஏற்படுவதால் அது நம் ஆத்மஸ்வரூபம், அனுபவரூபம் என்பது கிடைக்கிறது. **(57)**

(**அவதாரிகை**) முன் சுலோகத்தில் ப்ரஹ்மம் அகண்டானந்த வஸ்து என்று கூறப்பட்டது. புராணங்களில் தேவர்கள், இந்திரன், ப்ரஹ்மா முதலானவர்களும் மிகுந்த ஆனந்தத்தையனுபவிப்பதாக கூறப்பட்டுள்ளதே எனில் அதற்கு பதில் கூறுகிறார்: -

**अखण्डानन्दरूपस्य तस्यानन्द लवाश्रिताः ।**
**ब्रह्माद्यास्तारतम्येन भवन्त्यानन्दिनोऽखिलाः ॥ ५८ ॥**

**அக²ண்டா³னந்த³ரூபஸ்ய தஸ்யானந்த³ லவாஶ்ரிதா: ।**
**ப்³ரஹ்மாத்³யாஸ்தாரதம்யேன ப⁴வந்த்யானந்தி³னோ(அ)கி²லா: ॥ 58 ॥**

பிரிக்கமுடியாத ஆனந்தவடிவமான அந்த ப்ரஹ்மத்திலுள்ள ஆனந்தத்தின் துளியை அடைந்துதான் ப்ரஹ்மா முதலான எல்லோரும் ஏற்றத்தாழ்வுடன் மிகுந்த ஆனந்தமுள்ளவர்களாக விளங்குகின்றனர்.

உலகில் எல்லோரும் தான் விரும்பிய பொருள் கிடைத்ததும் ஆனந்தமேற்படு வதாக நினைக்கின்றனர். ஆனால் தைத்திரீய உபநிஷத்தில் ஏகசக்ராதிபதியாகவும் யுவாவாகவும், பலிஷ்டனாயும், அறிவாளியாயுமுள்ள மஹாராஜனுக்கு ஏற்படும்

ஆனந்தத்தைத்தான் மனுஷ்யானந்தம் என்று கூறியிருக்கிறது. இதைப்போல 100 மடங்கு ஆனந்தம் மனுஷ்ய கந்தர்வர்களுக்கு. இவ்வாறே தேவகந்தர்வர், பித்ருக்கள் முதலானவர்களுக்கு நூறு நூறு மடங்கு அதிகம் என்பதைக்காட்டி, பிரஹ்மாவின் ஆனந்தம்தான் எல்லாவற்றையும்விட உயர்ந்தது என்று கூறியிருக்கிறது. அந்த பிரஹ்மாவின் ஆனந்தமும் பிரஹ்மானந்தத்தின் லவலேசம் தான். அதாவது ப்ரஹ்மானந்தம் என்பது ஸமுத்திரம் போன்றது. அந்த ஸமுத்திரத்தின் ஒரு அலையிலிருந்து காற்றினால் கிளம்பிய ஒரு நீர்த்துளிபோன்றதுதான் பிரஹ்மாவின் ஆனந்தமும். ப்ரஹ்மானந்தம் அளவிட முடியாதது. **(58)**

**(அவதாரிகை)** ஆத்மா ஆனந்த ரூபம். அதுதான் பிரியமாக விளங்கும் வஸ்து என்று கூறப்பட்டது. இது சரியல்ல. அனாத்மாவான தேஹம் முதலியவைகளிடத்தி லும் எல்லோருக்கும் நிரதிசயமான ப்ரீதி ஏற்படுகிறதே! அவைகளும் நமக்கு விளங்குகிறதே எனில் கூறுகிறார்: -

**तद्युक्तमखिलं वस्तु व्यवहारस्तदन्वितः ।**
**तस्मात्सर्वगतं ब्रह्म क्षीरे सर्पिरिवाखिले ॥ ५९ ॥**

**தத்³யுக்தமகி²லம் வஸ்து வ்யவஹாரஸ்தத³ன்விதꞏ ।**
**தஸ்மாத்ஸர்வக³தம் ப்³ரஹ்ம க்ஷீரே ஸர்பிரிவாகி²லே ॥ 59 ॥**

எல்லாப்பொருளும் அந்த ப்ரஹ்மத்துடன் கூடியது, எல்லா வியவஹாரமும் அந்த ப்ரஹ்மத்துடன் கூடியது. ஆகையால் பால் முழுவதிலும் நெய் பரவியிருப்பது போல ப்ரஹ்மம் எங்கும் உள்ளது.

ப்ரஹ்மம் ஒன்றுதான் ஆனந்தரூபம். ஆகையால் அது தான் ப்ரியமான வஸ்து. ஆத்மாவுடன் ஸம்பந்தப்பட்டு இருப்பதால்தான் மற்றப்பொருள்களில் ப்ரீதி ஏற்படுகிறது. தனக்காகத் (ஆத்மாவுக்காக) தான் மற்ற பொருள்களில் ப்ரீதி ஏற்படுகி றது. ஆத்ம ஸம்பந்தமில்லாவிட்டால் அதில் ப்ரீதியில்லை. நிருபாதிகமான எல்லையற்ற ப்ரீதி ஆத்மாவில் தான். மேலும் ஆத்மஸம்பந்தமில்லாவிட்டால் உலகில் ஒரு வியவஹாரமும் கிடையாது. சேதனப்பொருள் ஆத்மா ஒன்றே. இதை த்தவிற மற்றவையெல்லாம் ஜடம். சேதனம்தான் தானாகவே விளங்கும். ஜடப் பொருள் சேதன ஸம்பந்தத்தால் விளங்குமே தவிற விளங்காது. ஆகவே, உலக வியவஹாரமோ, ப்ரீதியோ, ஆத்ம ஸம்பந்தத்தால் ஏற்படுவதால் ஆத்மரூபமான ப்ரஹ்மம் எங்கும் உளது. பாலைக்காய்ச்சித் தயிராக்கிக் கடைந்து வெண்ணையெடுத் துக் காய்ச்சி நெய் தயாரிக்கிறோம். இந்த நெய்யானது பால் முழுவதும் பரவியிருக் கிறது. அதுபோல் ப்ரஹ்மமும் எங்கும் பரவியுள்ளது. அது இல்லாத இடமில்லை. **(59)**

**(அவதாரிகை)** 57 வது சுலோகத்தில் உபநிஷத்துக்கள் இதுஅல்ல, இதுவல்ல என்ற ரீதியில் ப்ரஹ்மத்தை உபதேசிப்பதாகக் கூறப்பட்டது. அதை விவரிக்கிறார்: - '

**अनण्वस्थूलमह्स्व मदीर्घमजमव्ययम् ।**
**अरूपगुणवर्णाख्यं तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ६० ॥**

**அனண்வஸ்தூ²லமஹ்ரஸ்வ மதீ³ர்க⁴மஜமவ்யயம் ।**
**அரூபகு³ணவர்ணாக்²யம் தத்³ப்³ரஹ்மேத்யவதா⁴ரயேத் ॥ 60 ॥**

ப்ரஹ்மம் சிறியதுமல்ல, பருமனுமல்ல, குட்டையுமல்ல, நீளமுமல்ல, பிறப்பு இல்லை, அழிவு இல்லை. உருவம், குணம், நிறம், பெயர் இல்லாதது. அதுவே ப்ரஹ்ம மென்று தீர்மானித்துக் கொள்ளவேண்டும்.

பிருஹதாரண்யகம் முதலான உபநிஷத்துக்கள் பிரஹ்மத்தைப் பலவாறாக உபதேசித்தும் திருப்தியடையாமல் கடைசியில்

**(अस्थूलमनण्वह्रस्वमदीर्घ ३-८-८)**

**(அஸ்தூ²லமனண்வஹ்றக²மதீ³ர்க⁴ 3-8-8)**

என்று நிஷேதமுகமாகக் கூறி முடிக்கின்றன. சிறிய பொருள் ப்ரஹ்மமல்ல. பெரிய பொருளும் ப்ரஹ்மமல்ல. குட்டையான பொருளும், நீண்ட பொருளும் ப்ரஹ்ம மல்ல. உண்டாகும் பொருளும், அழியும் பொருளும் ப்ரஹ்மமல்ல. உருவம், குணம், நிறம், பெயர் இவை கொண்ட பொருளும் ப்ரஹ்மமல்ல. உலகில் நாம் காணும் பொருள்களில் கீழே சொல்லப்பட்ட தர்மங்கள் இருக்கும். சிறியதுமில்லாமல் பெரியதுமில்லாமல், குட்டையுமில்லாமல் நீளமுமில்லாமல் உலகில் ஒரு பொருளையும் காணமுடியாது. ஆகவே உலகப் பொருள்களெல்லாவற்றையும் ஒதுக்கித் தள்ளியதாக ஆகிறது. கடைசியில் மிஞ்சுவது ப்ரத்யக்கான ஆத்ம வஸ்து ஒன்றுதான். அது அநுபவரூபம். அதுவே ப்ரஹ்மம்.

**(அவதாரிகை)** மறுபடியும் ப்ரஹ்ம ஸ்வரூபத்தையே உபதேசிக்கிறார்: -

**यद्भासा भास्यतेऽर्कादि भास्यैर्यत्तु न भास्यते ।**
**येन सर्वमिदं भाति तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ६१ ॥**

**யத்³பா⁴ஸா பா⁴ஸ்யதே(அ)ர்காதி³ பா⁴ஸ்யைர்யத்து ந பா⁴ஸ்யதே ।**
**யேன ஸர்வமித³ம் பா⁴தி தத்³ப்³ரஹ்மேத்யவதா⁴ரயேத் ॥ 61 ॥**

எதன் ஒளியால் ஸூர்யன் முதலியவை பிரகாசிக்கப்படுகிறதோ, பிரகாசிக்கப் படும் அவைகளால் எது பிரகாசிக்கப்படுவதில்லையோ, எதனால் இது எல்லாம் விளங்குகிறதோ அது ப்ரஹ்மம் என்று தீர்மானிக்கவேண்டும்.

உலகில் ஒரு பொருளை நாம் அறிந்துகொள்ளவேண்டுமானால் கண், காது முதலான இந்திரியங்களின் உதவி வேண்டும். கண்ணால் பார்க்கவேண்டுமானால் ஸூர்யன், சந்திரன், தீபம் முதலான ஒளிமயப் பொருள்களின் உதவியும் வேண்டும். இருளில் கண் இருந்தும் பார்க்க முடியாது. ஆகவே ஸூர்யனோ, சந்திரனோ, தீபமோ பொருள்களை நமக்கு விளங்கவைப்பதாகவும், அந்த ஒளிப் பொருள்கள் தானே

விளங்குவதாகவும் நாம் எண்ணுகிறோம். இது தவறு. உலகில் ஒளியுள்ள பொருள் சேதனமான ப்ரஹ்மம் ஒன்றே. அதுதான் எல்லாவற்றையும் விளங்கவைக்கிறது. அது எங்கும் பரவியுள்ளது. அதன் சிதம்சத்தைக்கொண்டுதான் நாம் பொருள்களை அறிந்து கொள்கிறோம். பொருள்கள் நமக்கு விளங்குவதும் அந்த சித்தால்தான். ப்ரஹ்மசைதன்யமில்லாவிடில் ஒரு பொருளும் விளங்காது; நாம் அறிந்துகொள்ளவும் முடியாது ஒளியைக் கொடுக்கும் ஸூர்யன் முதலானவையும் ப்ரஹ்மசைதன்யத்தால்தான், தான் விளங்கிக்கொண்டு மற்றதையும் பிரகாசப்படுத்துகின்றன. கண் காது முதலான இந்திரியங்களும் சைதன்ய ஜ்யோதிஸ்ஸின் உதவியால்தான் வெளிப் பொருள்களை நமக்குக் காட்டுகின்றன. ஆகவே ஸூரியன், சந்திரன் முதலான ஒளியுள்ள பொருள்களின் இருப்பையே எந்த ப்ரஹ்மசைதன்யம் விளக்குகிறதோ, அந்த சைதன்யத்தை இவை எப்படிப் பிரகாசப்படுத்தமுடியும்? ஆகையால் ஒளியுள்ளதாயிருந்தாலும் ஸூரியன் சந்திரன் முதலியவைகளாலும் இந்திரியங்களாலும் ப்ரஹ்மத்தை அறிந்துகொள்ள முடியாது. **(61)**

(**அவதாரிகை**) ஸூர்யன், சந்திரன் முதலானவை தன் கிரணத்துடன் ஸம்பந்தப்பட்ட பொருள்களைத்தான் பிரகாசப்படுத்துகிறது. அதுபோல ப்ரஹ்மமும் அதனுடன் ஸம்பந்தப்பட்ட பொருள்களைத்தானே பிரகாசப்படுத்தும்! எல்லாவற்றையும் எப்படி விளக்கமுடியும் எனில் கூறுகிறார்: -

**स्वयमन्तर्बहिर्व्याप्य भासयन्नखिलं जगत् ।**
**ब्रह्म प्रकाशते वह्निः प्रतप्तायसपिण्डवत् ॥ ६२ ॥**

**ஸ்வயமந்தர்ப³ஹிர்வ்யாப்ய பா⁴ஸயந்நகி²லம் ஜக³த் ।**
**ப்³ரஹ்ம ப்ரகாஶதே வஹ்னி: ப்ரதப்தாயஸபிண்ட³வத் ॥ 62 ॥**

பழுக்கக் காய்ச்சின இரும்பில் நெருப்பு உள்ளும் புறமும் பரவியிருப்பது போல ப்ரஹ்மம் உலகமெல்லாவற்றிலும் உள்ளும் வெளியும் பரவி இருந்து கொண்டு எல்லாவற்றையும் பிரகாசப்படுத்துவதுடன் தானும் பிரகாசிக்கிறது.

எங்கும் நிறைந்த ஆகாசத்திற்கும் காரணமான பிரஹ்மம் இல்லாத இடம் கிடையாது. அது எங்கும் உள்ளது. ஆகவே எல்லாப் பொருள்களிலும் உள்ளும் வெளியும் ப்ரஹ்மம் நின்று அதனுடன் ஸம்பந்தப்பட்டிருப்பதால் அதனால்தான் எல்லாம் பிரகாசிக்கின்றன. எல்லாவற்றையும் பிரகாசப்படுத்தும் ப்ரஹ்மத்தை வேறு ஒன்றும் பிரகாசப்படுத்துவதில்லை. அது ஸ்வயம்பிரகாசம். தானாகவேதான் பிரகாசிக்கிறது. நெருப்பில் காய்ச்சிய இரும்பு உருண்டையை கவனியாமல் கையால் தொட்டுவிட்டான். கையில் நெருப்புக் காயம் ஏற்பட்டுவிட்டது. பிறரிடம் இரும்பு சுட்டுவிட்டது என்று சொல்கிறான். இது தவறு. இரும்புக்குச் சுடும் சக்தி கிடையாது. நெருப்புக்குத்தான் அந்த சக்தியுண்டு. நெருப்பு இரும்பு முழுவதும் பரவியுள்ளதால் இரும்பு சுடுகிறது என்று சொல்கிறோம். அதுபோல் எல்லா இடங்களிலும் பரவியுள்ள ப்ரஹ்மம்தான், எங்கும் தானும் பிரகாசித்துக் கொண்டு மற்றதையும் பிரகாசப்படுத்துகிறது. இதை அறியாமல் ஸூர்யன் முதலானவர்கள் தானே பிரகாசிப்பதாகவும், மற்றதை பிரகாசப்படுத்துவதாகவும் சொல்கிறோம். **(62)**

(**அவதாரிகை**) எல்லாவிடங்களிலும் எல்லாமாகவும் ப்ரஹ்மம் இருக்குமாஞல் ப்ரஹ்மத்தை அறிய ஏன் இவ்வளவு கஷ்டம்? உலகப் பொருள்களைத் தெரிந்து கொண்டே ப்ரஹ்மத்தை அறிந்துவிடலாமே எனில் கூறுகிருர்: -

**जगद्विलक्षणं ब्रह्म ब्रह्मणोऽन्यन्न किञ्चन ।**
**ब्रह्मान्यद्भाति चेन्मिथ्या यथा मरुमरीचिका ॥ ६३ ॥**

**ஜக³த்³விலக்ஷணம் ப்³ரஹ்ம ப்³ரஹ்மணோ(அ)ன்யன்ன கிஞ்சன ।**
**ப்³ரஹ்மான்யத்³பா⁴தி சேன்மித்²யா யதா² மருமரீசிகா ॥ 63 ॥**

உலகத்தைக்காட்டிலும் பிரஹ்மம் வேருன லக்ஷணமுடையது. ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேருன பொருள் ஒன்றும் கிடையாது. ப்ரஹ்மத்தைவிட வேருகத் தோன்றுமேயாஞல் அது கானல்நீர் போல பொய்யானது.

எல்லாவிடங்களிலும் ப்ரஹ்மம் இருக்கிறது என்பது உண்மை. ஆஞல் உலகமே ப்ரஹ்மமல்ல. உலகம் ஸ்திரமில்லாதது, ஜடம், அறிவற்றது. துக்கத்தைக் கொடுக்கக் கூடியது. ப்ரஹ்மமோ ஸத் (எப்பொழுதும் இருப்பது), அறிவு ஸ்வரூபம், ஆனந்தரூபம். ஆகையால் ஜகத்ப்ரஹ்மமல்ல.

**'जगद्विलक्षणं ब्रह्म'**

**'ஜக³த்³விலக்ஷணம் ப்³ரஹ்ம'**

ஆகவே உலகத்தை அறிந்து கொள்வதால் ப்ரஹ்மத்தை அறியமுடியாது.

உலகத்தைக்காட்டிலும் ப்ரஹ்மம் விலக்ஷணமாஞல் "இந்த உலகமெல்லாம் ப்ரஹமம்தான்" என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றனவே! அதன் கருத்தென்னவெனில்,

**'ब्रह्मणोऽन्यन्न विद्यते'**

**'ப்³ரஹ்மணோ(அ)ன்யன்ன வித்³யதே'**

அந்த உபநிஷத்துக்கள் ப்ரஹ்மமும் உலகும் ஒன்று என்று கூறவில்லை. ப்ரஹ்மத்தை விட உலகம் வேருக இல்லை. அதாவது எங்கும் ப்ரஹ்மம் தான் உளது. வேறு பொருள் ஒன்றும் கிடையாது என்ற கருத்தைத் தெரிவிக்கின்றன. 'அத்வைதம்' என்ற பதத்திற்கும் த்வைதப்ரபஞ்சம் இல்லையென்பதுதான் பொருள். பாமதீகாரரும்

**'न खलु अनन्यत्वमिति अभेदं ब्रमः, किं तु मेदं व्यासेधामः'**

**'ந க²லு அனன்யத்வமிதி அபே⁴த³ம் ப்³ரமः, கிம் து மேத³ம் வ்யாஸேதா⁴மः'**

(**तदनन्यत्वं ததநந்யத்வம்** என்ற ப்ரஹ்மஸூத்ர பதத்தால் பிரபஞ்சமும் ப்ரஹ்மமும் ஒன்று என்று சொல்லவில்லை. ப்ரஹ்மத்தைவிட வேருக பிரபஞ்சம் கிடையாது என்று தான் கூறுகிறேம்) என்று சொல்கிருர். ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேருக

பிரபஞ்சமில்லை அது நம் புலன்களுக்கு எப்படித் தோன்றும்? ப்ரஹ்மம் நமக்குத் தெரியவில்லை. ஆனால் பிரபஞ்சம் நமக்குத் தெரிகிறது. இந்த பிரபஞ்சத்தை எப்படி இல்லையென்று கூறமுடியும் எனில்,

**"ब्रह्मान्यद्भाति चेन्मिथ्या यथा मरुमरीचिका"**

**"ப்³ரஹ்மான்யத்³பா⁴தி சேன்மித்²யா யதா² மருமரீசிகா"**

பிரபஞ்சத்தை அடியோடு இல்லையென்று கூறவில்லை. அது வாஸ்தவமாக இல்லை என்று தான் சாஸ்திரம் கூறுகிறது அதாவது பிரபஞ்சம் பொய். பொய்யான வஸ்துக்கள் உலகில் தோன்றுவதை நாம் பார்த்திருக்கிறோம். கடும் கோடையில் நடுப்பகல் வேளையில் காட்டில் அகப்பட்டுக்கொண்ட மனிதன் தாகமடைந்து கானலைப் பார்த்து நீர் என எண்ணி விரைகின்றான். உண்மையில் அங்கு நீர் இல்லாவிட்டாலும் அவன் கண்களுக்கு கானல் மறைந்து நீர்தான் தோன்றுகிறது. ஒருநாளும் கானல் நீர் ஆக முடியாது. இதுபோல் ப்ரஹ்மம் ஒன்றுதான் உண்மைப் பொருள். அது ஒரு நாளும் பொய்யான பிரபஞ்சமாக ஆகமுடியாது. அது தெரியாமல் மறைந்துவிட்டதால் பலவகைப் பிரபஞ்சம் பொய் தோன்றுகிறது. தோன்றும் இவை எல்லாம் என்பதுதான் தீர்மானம்.

**(அவதாரிகை)** முன் சுலோகத்தில் சொன்ன விஷயத்தை விவரித்துக் கூறுகிறார்: -

**दृश्यते श्रूयते यद्यत् ब्रह्मणोऽन्यन्न तद्भवेत् ।**
**तत्वज्ञानाच्च तद्ब्रह्म सच्चिदानन्दमद्वयम् ॥ ६४ ॥**

**த்³ருஶ்யதே ஶ்ரூயதே யத்³யத் ப்³ரஹ்மணோ(அ)ன்யன்ன தத்³ப⁴வேத் ।**
**தத்வஜ்ஞானச்ச தத்³ப்³ரஹ்ம ஸச்சிதா³னந்த³மத்³வயம் ॥ 64 ॥**

எதெது பார்க்கப்படுகிறதோ, கேட்கப்படுகிறதோ, அதெல்லாம் பிரஹ்மத்தைக் காட்டிலும் வேறாக இல்லை. தத்வ ஞானத்தால் (எல்லாம்) ஸச்சிதானந்தமாயும் இரண்டற்றதாயுமுள்ள அந்த ப்ரஹ்மமாகத் தெரிகிறது.

உலகில் கண்ணால் பார்க்கப்படுவதும், காதால் கேட்கப்படுவதும், வாக்கால் சொல்லப்படுவதும், மனதால் நினைக்கப்படுவதும் இன்னும் மற்ற இந்திரியங்களால் அறியப்படுவதுமான பொருள்கள் எல்லாம் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறான உண்மைப் பொருள்களல்ல. ப்ரஹ்மம் ஒரு இந்திரியத்தாலும் அறியமுடியாத பொருளாதலால் ஆகவே இவைகளே ப்ரஹ்மமென்றும் கூறமுடியாது. விளங்காத தால் நமக்கு அக்ஞான நிலையில் உண்மை எங்கும் உள்ள ப்ரஹ்மமே கானல் நீராகத் தோன்றுவது போல் பிரபஞ்சமாகத் தோன்றுகிறது. காட்டிலுள்ள மனிதன் அருகில் சென்று நீரைக் காணாமல் இது நீரல்ல, கானல்தான் என அறிந்துகொள்வதுபோல உலகின் தத்வத்தை அறிந்த ஞானிக்கு பொய்த்தோற்றம் மறைந்து அதிஷ்டானமான ஸச்சிதானந்த பிரஹ்மம் என்ற உண்மைப்பொருள் விளங்கும். **(64)**

(**அவதாரிகை**) எல்லா இடங்களிலும் ஒளிமயமாக விளங்கும் ப்ரஹ்மத்தை எல்லோரும் அறிந்துகொள்ளாததற்குக் காரணம் கூறுகிறார்: -

**सर्वगं सच्चिदानन्दं ज्ञानचक्षुर्निरीक्षते ।**
**अज्ञानचक्षुर्नेक्षेत भास्वन्तं भानुमन्धवत् ॥ ६५ ॥**

**ஸர்வக³ம் ஸச்சிதா³னந்த³ம் ஜ்ஞானசக்ஷுர்நிரீக்ஷதே ।**
**அஜ்ஞானசக்ஷுர்னேக்ஷேத பா⁴ஸ்வந்தம் பா⁴னுமந்த⁴வத் ॥ 65 ॥**

எங்குமுள்ள ஸச்சிதானந்த ஸ்வரூபமான ஆத்மாவை ஞானக்கண்ணுள்ளவன் பார்க்கிறான். ஞானக்கண்ணில்லாதவன், ஒளியுடன் கூடியிருந்தாலும் ஸூர்யனை குருடன் பார்க்காததுபோல் ப்ரஹ்மத்தைப் பார்ப்பதில்லை.

ப்ரஹ்மம் எங்கும் இருக்கிறது என்பதும் எல்லோருக்கும் மிகவும் அருகிலேயே இருக்கிறது என்பதும் வாஸ்தவம்; ஆனாலும் அதை ஒருவரும் பார்ப்பதில்லை. ஒரு பொருளை நாம் தெரிந்துகொள்ள வேண்டுமானால் அது நம் அருகில் இருந்தால் மட்டும் போதாது. அதைப் பார்ப்பதற்குத் தகுந்த கருவியும் நம்மிடம் இருக்க வேண்டும். பிறவிக்குருடன் தன் அருகிலுள்ள பொருளைப் பார்க்கமுடியுமா? அதே போல ப்ரஹ்மம் ஸ்வயம் ப்ரகாச வஸ்துவாயிருந்தாலும் அதை நாம் பார்க்க முடிவதில்லை. நடுப்பகலில் சூரியன் நன்கு பிரகாசித்துக்கொண்டிருந்தபோதிலும் குருடனால் பார்க்கமுடிவதில்லை. ஆகவே பொருள்களைப் பார்ப்பதற்கு நமக்குக் கண் தேவையாயிருக்கிறது. கண் இருந்தும் இரவில் பார்க்கமுடிவதில்லை. ப்ரகாச வஸ்துவின் உதவி வேண்டியிருக்கிறது. இந்தக் கண் அக்ஞானக் கண். இதைக்கொண்டு உலகப் பொருள்களைப் பார்க்கலாமே தவிற ப்ரஹ்மத்தைப் பார்க்க முடியாது. உலகப் பொருள்களைக்கூட சில சமயம் இந்தக் கண் சரியாகக் காட்டுவதில்லை. மேலும் சைதன்யத்தின் உதவியைக்கொண்டுதான் கண் பொருளை நமக்குக் காட்டுகிறது அந்த சைதன்யத்தைக் கண்ணால் எப்படிப் பார்க்கமுடியும்? அது கண்ணுக்கும் கண்ணாக இருக்கிறது.

**"चक्षुषः चक्षुः" "यञ्चक्षुषा न पश्यति येन चक्षूंषि पश्यति" ।**
**"न चक्षुषा गृह्यते" "न चक्षुषा पश्यति कश्चनैनम्" ॥**

**"சக்ஷுஷ: சக்ஷு:" "யஞ்சக்ஷுஷா ந பஶ்யதி யேன சக்ஷூம்ஷி பஶ்யதி" ।**
**"ந சக்ஷுஷா க்³ருஹ்யதே" "ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சனைனம்" ॥**

பரமாத்மா அர்ஜுனனுக்கு விச்வரூபத்தைக் காட்டும் பொழுது இந்தக் கண்ணால் பார்க்கமுடியாது என்று எண்ணி வேறு திவ்ய சக்ஷுஸ்ஸைக் கொடுத்ததாக கீதை கூறுகிறது. ப்ரஹ்மத்தை பார்ப்பதற்கு ஞானம் என்ற கண்ணைப் பெற வேண்டும். அக்ஞானம் நீங்கவேண்டும். ஞானிகள்தான் ப்ரஹ்மத்தைப் பார்க்க முடியும். **(65)**

श्रवणादिभिरुद्दीप्तो ज्ञानाग्निपरितापितः ।
जीवः सर्वमलान्मुक्तः स्वर्णवत् द्योतते स्वयम् ॥ ६६ ॥

**ஶ்ரவணுதி³பி⁴ருத்³தீ³ப்தோ ஜ்ஞாநாக்³னிபரிதாபித꞉ ।**
**ஜீவ꞉ ஸர்வமலான்முக்த꞉ ஸ்வர்ணவத் த்³யோததே ஸ்வயம் ॥ 66 ॥**

ஜீவன் தங்கம்போல ச்ரவணம் முதலியவைகளால் பிரகாசத்தையடைந்து ஞானம் என்ற நெருப்பில் புடம் செய்யப்பட்டு எல்லா அழுக்குகளிலிருந்தும் விடு பட்டு தாஞகவே பிரகாசிக்கிறுன்.

மண்ணுக்குள் மறைந்து அழுக்கேரியிருக்கும் தங்கத்தை முதலில் எடுத்ததும் அதைத் தங்கமென யாரும் சொல்லமாட்டார்கள். உலோகங்களின் ஸ்வரூபத்தை அறிந்தவன் வந்து பார்த்து 'இது தங்கம்' என்று சொன்னபிறகு அதைத் தேய்த்து அழுக்கை அகற்றினதும் பிரகாசமடைந்து நமக்கும் அது தங்கமெனத் தெரிகிறது. கடைசியில் நெருப்பில் போட்டு புடம் பண்ணி எடுத்தால் அதில் உள்ள பிற அம்சங்க ளெல்லாம் நீங்கி சுத்த தங்கமாக ஒளியுடன் விளங்குகிறது. இங்கு இதை நன்கு தேய்ப்பதோ, நெருப்பில் போட்டு புடம் பண்ணி எடுப்பதோ இவைகளெல்லாம் தங்கத்தில் ஒளியை யுண்டுபண்ணுவதற்கல்ல. தங்கத்திற்கு ஒளி இயற்கையிலேயே அமைந்துள்ளது. அதில் படிந்திருந்த அழுக்குகளும் பிற அம்சங்களும் அந்த ஒளியை நமக்குத் தெரிய வொட்டாமல் மறைத்துக்கொண்டிருந்தன. அவைகளை அகற்றினதும் தங்கத்தின் பிரகாசம் நன்கு தெரிகிறது. இதுபோல் ஆத்ம சைதன்ய வஸ்துவில் அஞதிகாலமாக அக்ஞானம் என்ற அழுக்கு ஏறி ஸச்சிதானந்த ஸ்வரூபம் மறைந்து ஜீவன் என்ற பெயருடன் விளங்குகிறுன், குருவினிடம் சென்று வேதாந்த விசாரம் செய்யுங்காலத்தில் ச்ரவண மனன நிதித்யாஸனங்களால் ஆத்மா ஸச்சிதானந்த ஸ்வரூபம் என்பதை பரோக்ஷமாக உணருகிறோம். கடைசியில் த்யான பலத்தால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் என்ற நெருப்பில் போட்டு எடுத்தவுடன் தான் எல்லா மறைவு களும் நீங்கி ஸச்சிதானந்த ஸ்வரூபம் பிரத்யக்ஷமாக நமக்குத் தெரிகிறது. **(66)**

हृदाकाशोदितो हयात्मबोधभानुस्तमोपहृत् ।
सर्वव्यापी सर्वधारी भाति सर्वं प्रकाशते ॥ ६७ ॥

**ஹ்ருதா³காஶோதி³தோ ஹயாத்மபோ³த⁴பா⁴னுஸ்தமோபஹ்ருத் ।**
**ஸர்வவ்யாபீ ஸர்வதா⁴ரீ பா⁴தி ஸர்வம் ப்ரகாஶதே ॥ 67 ॥**

ஹ்ருதயம் என்னும் ஆகாசத்தில் உண்டான ஆத்ம ஞானம் என்ற ஸூரியன் அஞ்ஞானம் என்னும் இருளைப் போக்கி எங்கும் பரவி எல்லாவற்றிற்கும் ஆதாரமாக விளங்குகிறது. அப்பொழுது எல்லாம் ஆத்ம ஸ்வரூபமாக பிரகாசிக்கிறது.

ஆகாசத்தில் ஸூர்யன் உதித்தமாத்திரத்தில் மறுகணமே எல்லா இருளும் நீங்கிவிடுகிறது. அதன் பிரகாசம் எங்கும் பரவி, எல்லாப்பொருள்களும் நமக்கு நன்கு விளங்குகின்றன. அதுபோல் சிரவணம், மனனம், நிதித்யாஸனம் இவைகளைச் செய்து வந்தால் மனத்தில் ஆத்மஞானம் என்ற ஸூரியன் உதயமாகிறுன். உடனே

அக்ஞானம் நீங்கி விடுகிறது. அப்பொழுது எங்கும் பரவியள்ளதும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாக (அதிஷ்டானமாக) இருப்பதும் எல்லாமாக இருப்பதுமான ஆத்மவஸ்து பிரகாசிக்கிறது.

**(அவதாரிகை)** இவ்வாறு ஆத்மஞானமடைவதற்குப் பல உபாயங்களையும், ஆத்மஸ்வரூபத்தையும், ஞானியின் நிலையையும், விரிவாக நிரூபணம் செய்து விட்டுக் கடைசியாக ஆத்மஞானியின் சிறப்பைக் கூறி நூலை உபஸம்ஹாரம் செய்கிறுர்: -

**दिग्देशकालाद्यनपेक्ष्य सर्वगं**
**शीतादिहन्नित्यसुखं निरञ्जनम् ।**
**य: स्वात्मतीर्थं भजते विनिष्क्रिय:**
**स सर्ववित सर्वगतोऽमृतो भवेत् ॥ ६८ ॥**

**தி³க்³தே³ஶகாலாத்³யனபேக்ஷ்ய ஸர்வக³ம்**
**ஶீதாதி³ஹந்நித்யஸுக²ம் நிரஞ்ஜனம் ।**
**ய: ஸ்வாத்மதீர்த²ம் ப⁴ஜதே விநிஷ்க்ரிய:**
**ஸ ஸர்வவித ஸர்வக³தோ(அ)ம்ருதோ ப⁴வேத் ॥ 68 ॥**

**श्रीमत्परमहंस परिव्राजकाचार्य गोविन्दभगवत्पूज्यपाद-**
**शिष्य श्रीमच्छंकरभगवत्पाद विरचितं**
**आत्मबोधप्रकरणं संपूर्णम् ॥**

**ஶ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய கோ³விந்த³ப⁴க³வத்பூஜ்யபாத³-**
**ஶிஷ்ய ஶ்ரீமச்ச²ங்கரப⁴க³வத்பாத³ விரசிதம்**
**ஆத்மபோ³த⁴ப்ரகரணம் ஸம்பூர்ணம் ॥**

திசை, தேசம், காலம், முதலானவற்றை எதிர்பாராமல் எங்குமுள்ளதும் குளிர் முதலியவற்றைப் போக்குவதும், எப்பொழுதும் ஸுகத்தைத் தருவதும், அழுக்கற்றது மான தனது ஆத்மஸ்வரூபம் என்னும் தீர்த்தத்தை எவன் ஸேவிக்கிறுனே, அவன் எல்லாச் செய்கைகளுமற்று எல்லாமறிந்தவனுகவும் எங்கும் உள்ளவனுகவும் ஆகி மரண மற்ற நிலையையடைவான்.

உலகில் பாபங்கள் விலகவும் புண்யங்களைச் சேகரிக்கவும் கங்கை, காவேரி முதலான புண்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யவேண்டுமென தர்மசாஸ்திரங்கள் உபதேசிக்கின்றன. சில புண்ய தீர்த்தங்களில் புண்யகாலத்தில் ஸ்நானம் செய்வதால் அமரனுகவும் (சாவில்லாத தேவனுகவும், பிறப்பையடைகிறுன். இவ்விதச் சிறந்த மஹிமைகள் பொருந்தியிருந்தாலும் அதன்மூலம் சாச்வதமான ஸுகத்தையடைய முடியாது.

புண்ய தீர்த்தஸ்நானத்தால் ஒருவேளை தேவப்பிறவி ஏற்பட்டாலும்

**'जातस्य हि ध्रुवो मृत्युः '**

**'ஜாதஸ்ய ஹி த்⁴ருவோ ம்ருத்யுঃ '**

என்ற நியாயப்படி அதற்கும் ஒருநாள் முடிவு உண்டு.

**'क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति'**

**'க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி'**

புண்யம் செலவானதும் மறுபடியும் பூலோகத்தில் பிறக்கவேண்டியதுதான். மனிதர்களைப்போல் அவர்கள் அடிக்கடி சாவதில்லை என்பதைக் கொண்டுதான் அவர்களை அமரர்கள் என்கிறோம். ஆகவே பிறப்பு இறப்பு அற்ற எப்பொழுதும் ஆனந்தமான நிலையையடைய வேண்டுமானால் அதற்கு புண்ய தீர்த்த ஸ்னானம் ஸாதனமாகாது. ஆத்ம ஸ்வரூபம் என்ற தீர்த்தத்தை ஸேவித்தால்தான் அதாவது ஆத்ம ஞானத்தையடைந்தால்தான் அந்த நிலையையடைய முடியும்.

மேலும் நாம் இருக்குமிடத்திலிருந்துகொண்டு புண்ய தீர்த்த ஸ்னானம் செய்ய முடியாது.. அது இருக்குமிடம் தேடிச் செல்லவேண்டும். ஆத்ம தீர்த்தம் எங்கும் நிறைந்திருப்பதால் வேறு இடம் செல்லவேண்டியதில்லை. புண்ய தீர்த்தம் திக்கு, தேசம் காலம் இவைகளை எதிர்பார்த்து மிகுந்த புண்யத்தைக்கொடுக்கும். கங்கைக்கு உத்தர வாஹினியாகச் செல்லும் இடம், ப்ரயாகம் முதலான தேசம், புண்யகாலம் இவைகளையனுசரித்துச் சிறப்பு உண்டு. இவைகளை எதிர்பார்க்காமலேயே எக்காலத் திலும் மோக்ஷத்தைக் எல்லாதேசத்திலும் ஆத்ம ஞானம் மோக்ஷத்தைக் கொடுக்க வல்லது. புண்ய தீர்த்தமானது சிலகாலத்தில் குளிராலும் சில காலத்தில் உஷ்ணத்தாலும் துன்பத்தைக் கொடுக்கும். ஆத்மஞானம் குளிர், உஷ்ணம் முதலான எல்லா த்வந்தவங்களையும் போக்கிவிடும். புண்யதீர்த்தத்தில் சில இடத்தில் அழுக்கு இருக்கக்கூடும். ஆத்ம தீர்த்தத்தில் ஒருவித தோஷமும் கிடையாது. புண்ய தீர்த்தம் சென்ற பிறகு அங்கு ஸ்னானம், தானம் முதலான பல காரியங்களைச் செய்ய வேண்டியிருக்கும். ஆத்மஞானமடைந்த பிறகு அவனுக்குச் செய்யவேண்டியது ஒன்றுமில்லை.

**'तस्य कार्यं न विद्यते ।'**

**தஸ்ய கார்ய ந வித்³யதே ।'**

இவ்விதப் பெருமையுள்ள ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்தவனே ஸர்வக்ஞன். இவன் எங்குமிருப்பவன். பிராரப்த சரீரம் விடுபட்டதும் பிறப்பு, இறப்பு அற்ற அழிவில்லாத ஆனந்த நிலையையடைவான்.

**ஸ்ரீ சங்கரபகவத்பாதர் அருளிய**
**ஆத்மபோதம் என்னும் பிரகரணம் முற்றிற்று.**



शृङ्गगिरि श्रीशारदापीठाधिपतीनां जगद्गुरूणां
**श्रीमदभिनव विद्यातीर्थमहास्वामिनां आशिषः ॥**

**भोः आस्तिकमहाशयाः !**

**परमपुरुषार्थावाप्तये मानवं जन्म लब्धमस्माभिः । परम पुरुषार्थावाप्तिश्च आत्मज्ञानैकसमधिगम्या | आत्मज्ञानं च उपनिषच्छ्रवणसाध्यम् । औपनिषदं श्रवणं वैयासिकसूत्रपरिशीलनेनैव संपादनीयम् । तदिदं सर्वं विधातुमपारयतां लोकानामुपकाराय श्रीमच्छंकरभगवत्पादाः औपनिषदं रहस्यं सरलेषु प्रकरणग्रन्थेषु संजगृहुः । तेषु प्रकरणग्रन्थेषु आत्मबोधनामकः प्रबन्धः सरसं सरलं च आत्मानमवबोधयन् उल्लसति । श्रीशंकर सेवासमितिः ग्रन्थमिमं द्राविडभाषानुवादेन साकं मुद्राप्य प्रकाश्य लोकानां महतीं उपकृतिमातनोत् । सानुवादं ग्रन्थमिमं पठित्वा अध्यात्मपथे 'कृतप्रवेशा भूयासुलका इत्याशास्महे ॥**

**मुकाम् : - चेन्नपुरी ।**

**इति नारायणस्मरणम्**